PARLE

# பால் சாப்பிடுங்கள்




சுவை மற்றும் ஊட்டச்சத்து அடங்கிய பேக் தான் **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட். ஏனெனில், **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் பேக்கில் பாலின் நற்குணங்கள் உள்ளன. ஒவ்வொரு வளரும் குழந்தைக்கு ஆதாரமாக விளங்கும் ஊட்டச்சத்து நிறைந்தது. ஆகையால் தான், **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் ஒரு ஆரோக்கியமான பிஸ்கட். மற்றும் சுவையானதும் கூட. இந்தியா முழுவதிலும் உள்ள பெரும்பாலான தாய்மார்களின் நம்பிக்கையை **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் பெற்றிருப்பதே இதன் காரணமாகத்தான். இன்றே ஒரு **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட் பேக்கெட் வாங்குங்கள். உங்கள் குழந்தைக்குத் தேவையான ஆரோக்கியத்தை அளியுங்கள். **பார்லே-ஜீ** குளுக்கோ பிஸ்கட். *இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்.*




• *சுவை மிகுந்தது. உண்மையான சக்தி நிறைந்தது* •

everest/97/PP/43 tm

உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!

# மங்கை



ஜனவரி '98

## பொங்கல் சிறப்பிதழ்



லீலா கிருஷ்ணன், கமலா சடகோபன், சாரதா விஸ்வநாதன், வையவன், பார்கவி, கீதா தெய்வசிகாமணி, அன்பு நெஞ்சன், உஷா ஸ்ரீகுமார், ஷைலஜா

மற்றும் பல முன்னணி எழுத்தாளர்களின் படைப்புகள்.

வித்தியாசமான கட்டுரைகள்... கதைகள்!

வியக்க வைக்கும் அழகிய அமைப்பு!!

விலை ரூ. 10/-



# அம்புலிமாமா

## ஜனவரி 1998



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**


SNOOZE
MRP Rs.199



# அம்புலிமாமா




நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## சாது சன்னியாசிகளின் புரட்சி

இந்திய வரலாற்றில் 18ம் நூற்றாண்டில் விடுதலைப் போரில் சாது சன்னியாசிகள் பங்கு கொண்டது ஒரு அதிசய சம்பவம். மக்களிடமிருந்து விலகிக் கானகங்களிலும் மலைக் குகைகளிலும் வாழ்ந்து வந்தவர்கள் போர்க் கொடி தூக்கினார்கள். யாரை எதிர்த்து? கிழக்கிந்தியக் கம்பெனி ஆங்கிலேயர்களை எதிர்த்துத்தான்.

ஆங்கிலேயர்களோடு ஒத்துழைத்த நிலச்சுவான்தாரர்களையும், பிரபுக்களையும் இவர்கள் எதிர்த்தார்கள். இவர்களது இயக்கம் வங்கத்திலும் பீஹாரிலும் நடந்தது. 18ம் நூற்றாண்டின் இறுதியில் இப்பகுதிகளில் கடும் பஞ்சம் ஏற்பட்ட போதிலும் கம்பெனி மக்களைக் கசக்கிப் பிழிந்து வரி வசூலிக்கலாயிற்று.

சாது சன்னியாசிகள் இக் கொடுமைகளை எதிர்க்கும் படி மக்களைத் தூண்டினார்கள். கம்பெனி அதிகாரிகள் சாதுக்களின் நடமாட்டத்தை ஒடுக்கினார்கள். சாது சன்னியாசிகள் கம்பெனி சொத்துக்களைக் கொள்ளையடித்தார்கள். பவானி பாடக், தேவி சௌத ராணி, மஜ்னு பக்கீர், முஷா ஷா, கிருபாநாத், சிராக் அலி போன்ற சாது, பக்கீர்கள் தலைமையில் இக் கொள்ளைகள் நடந்தன. இந்த இயக்கம் பல வருடங்களுக்குப் பின் அடக்கப்பட்டது.

பக்கீம் சந்திரர் இந்த இயக்கங்களை விவரித்து ஆனந்த மடம், தேவி சௌத ராணி என்ற நாவல்களை எழுதினார். இவரது ஆனந்த மட நாவலில் தான் 'வந்தே மாதரம்' என்ற நாட்டுப்பற்று கீதம் வருகிறது.

**மதிமுகம்: 102** **ஜனவரி 1998** **புன்னகை: 1**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



# ஜனவரி '98 மங்கையின்

## இலவச இணைப்பு

# ஆன்மீக மலர்

# ஆஞ்சநேயர்

## சிறப்பு மலராக மலர்ந்துள்ளது!

- அஷ்ட பலன்கள் அருளும் ஆஞ்சநேயர்
- ராகி குட்டா பிரசன்ன ஆஞ்சநேயர் ஆலயம்
- பழைய மாம்பலம் இஷ்ட சித்தி ஆஞ்சநேயர்
- நாமக்கல் ஆஞ்சநேயர்
- ஆஞ்சநேயர் பக்தரை சனிபகவான் ஏன் சோதிப்பதில்லை?
- புத்திமான் ஹனுமான்
- ஹனுமான் சாலீஸா



- லட்சுமி ராஜரத்னம் எழுதும் அர்த்தமுள்ள ஆஞ்சநேய தத்துவங்கள் (சிறப்புக் கட்டுரை)
- சுசீந்திரம் ஆஞ்சநேயர்
- அசோக் நகர் ஜெய் ஆஞ்சநேயர்
- ஆஞ்சநேயர் பதிகம்

மற்றும்

அரவிந்தர், சத்ய சாயி பாபா, பற்றிய அருள் ஞானத் தொடர்கள்!

செய்திகளும் தகவல்களும்

# முதலாவது இந்திய விண்வெளி வீராங்கனை

கார்னாலிலுள்ள டாகூர் பாலநிகேதனில் படித்து வந்த கல்பனா சாவ்லாவுக்கு சிறு வயதி லேயே விமானங்களின் படங்களை வரைய ஆர்வம் இருந்தது. உயர்நிலைப்பள்ளிப் படிப்பு முடிந்ததும் அவரை டாக்டருக்கும் படிக்க வைக்க அவரது பெற்றோர் விரும்பினர். ஆனால் அவர் பொறிஇயல்தான் படிக்க வேண்டுமென்று பிடி வாதம் பிடித்து விண்வெளிஇயலை (ஏரோ நாடிக்ஸ்) பாடமாக எடுத்துக் கொண்டார். அப் போது அவரது வயது 17. அதன்பின் பதினெட்டு ஆண்டுகள் தொடர்ந்து முயற்சி செய்து அதன் பயனாக இப்போது நவம்பர் 19ல் மற்றும் அறுவருடன் கொலம்பியா விண்வெளிக்கலத்தில் விண் வெளிப் பயணத்தைத் துவக் கினார்.



விண்வெளியில் அடி எடுத்து வைக்கும் முதலா வது இந்தியப் பெண்மணி என்னும் இந்த வாய்ப்பைப் பெற்ற முதலாவது ஆசியப் பெண்மணி என்றும் கல் பனா சால்வா புகழ்பெற்று விட்டார். ஹரியானா மாநி லத்தின் சிறிய நகரான கார் னால் டில்லிக்கு அருகே உள்ளது. அங்குதான் கல்பனா சாவ்லா பிறந்தார். ஏரோநாடிகலை முக்கிய விஷயமாக எடுத்துக் கொண்ட முதல் மாணவி என்பதோடு ஆசிரியர்கள் பாராட்டும் விதத்தில் நன்கு படித்தும் வந்தார். பட்டம் பெற்ற பின் அமெரிக்கா வுக்குப் போய் மேல்படிப்பு படிக்கப் பிடிவாதம் பிடித்து அங்கு சென்றார். அங்கும் ஏரோநாடிக்ஸில் டாக்டர் பட்டம் பெற்று ஆராய்ச்சிகள் நடத்தி கமெர்ஷியல் பைலட்டாக உள்ள பெர்ரிஹாரிச னின் அறிமுகம் பெற்றார். அதன் பின் அவரையே கல்பனா மணந்து கொண்டார். அவரது உதவி யால் கல்பனாவும் கமர்ஷியல் பைலட் லைசன்ஸ் பெற்றார். 1987ல் இவர் தனியாகவே விமா னத்தை ஓட்டினார்.

இதன் பிறகு அவரது கவனம் விண்வெளி ஆராய்ச்சியின் பக்கம் திரும்பியது. நேஷனல் ஏரோநாடிக்ஸ் அண்ட் ஸ்பேஸ் அட்மினிஸ்ட் ரேஷனில் (நாசா) சேர்ந்து விரைவிலேயே அதில் ஒரு துறையின் துணைத் தலைவரானார். விண் வெளிக்கு அனுப்பப்படுவோரின் தேர்வு விளம் பரம் கண்டு அதற்கு 1992ல் மனுச் செய்தார். 1994ல் மீண்டும் ஒருமனுவை அனுப்பினார். சுமார் 3000 பேர்களுக்குத் தேர்வு நடத்தி அவர் களில் 19 பேர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அவர் களில் கல்பனா சாவ்லாவும் ஒருவர். 1996ல் கடைசித் தேர்வு நடந்தது. ஹோஸ்டன் ட்ரெயி னிங் சென்டரில் இவர் 16 மாதங்கள் பயிற்சி பெற்றார். அப்போது கொலம்பியாவின் 88வது விண்வெளிப் பயணத் திற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. மூன்று அமெரிக்க விண் வெளிப் பயணிகள், ஜப் பானின் முதலாவது விண்வெளிப் பெண் பயணி டாகாய் தோம், உக்ரேனிய நாட்டைச் சேர்ந்த மற்றொரு விண் வெளிப் பயணி ஆகி யோருடன் சேர்ந்து, கல்பனா கொலம்பியா 88வது விண்வெளிப் பய ணத்தில் சென்றார்.

விண்வெளிப் பயணிகள் விண்வெளியி லுள்ள 15 நாட்களுக்கும் திரவ உணவையே உட் கொள்ள வேண்டும். தினமும் 16 மணிநேரம் ஆராய்ச்சிகளுடன் புள்ளி விவரங்களையும் சேகரிக்க வேண்டும். 8 மணி நேரம் முறை போட்டுக் கொண்டு தூங்க வேண்டும்.

விண்வெளிக்கல ஆராய்சிக்குக் கல்பனா சாவ்லா தலைமை தாங்கியுள்ளார். சூரிய கோளத் தைப் பற்றி ஆராய ஃப்ரீ ஃப்ளையிங் சாட்லெட் ஐ விடுவித்துள்ளார். டாகாய் தோமாவுடன் சேர்ந்து விண்வெளியில் நடக்கிறார்.

கல்பனா சாவ்லாவின் விண்வெளிப் பயணத்தை மிகுந்த ஆவலுடன் நம் நாட்டு மக்கள் கவனித்து வருகிறார்கள். விண்வெளிக்குப் பயண மாகு முன் இந்தியப் பிரதிநிதிகளின் குழுவிடம் ''இது பாரத நாடு பெருமைப்பட்டுக் கொள்ளும் வேளை'' என்று கல்பனா சாவ்லா கூறினார்.



# கைபட்டால் உடையும்!

திருநகரில் சொக்கநாதனுக்கும் மீனாட்சிக்கும் பிறந்த ஒரே மகள் சாருமதி. சிறுவயதிலிருந்தே அவள் எதைத் தொட்டாலும் உடைந்து போய் விடும். துணியானால் கிழிந்து விடும். இரண்டு மாதக் குழந்தையாக இருக்கையில் சாருமதி தன் தாயாரின் விலையுயர்ந்த சரிகைப்பட்டு புடவையைத் தன் கைகளால் இறுகப் பற்றிக் கொள்ளவே அதை விடுவிக்க யாராலும் முடியவில்லை. முடிவில் கத்தி கொண்டு புடவையை அறுத்துத்தான் தனியாக்க வேண்டியதாயிற்று.

புடவை பாழாகி விட்டதே என்று மீனாட்சி வருந்தினாள். அவளை சொக்கநாதன் தேற்றி ''குழந்தை தானே! வேண்டுமென்றா செய்தாள்? விட்டுத் தள்ளு'' என்று ஆறுதல் கூறினான். அடுத்த மாதம் அவர்களது வீட்டிலிருந்த அழகிய வேலைப்பாடு கொண்ட கண்ணாடி ஜாடி 'பணால்'. அதை சாருமதிதான் தட்டி விட்டாள். அது உருத்தெரியாமல் சுக்கல் சுக்கலாகிப் போயிற்று.

இப்படியே சில வருடங்களுக்கு மாதத்திற்கு ஒன்றாக ஏதாவது ஒரு பொருளை சாருமதி தட்டிவிட அது கீழே விழுந்து உடைந்து எதற்கும் பயனில்லாது போய்விட்டது. இதைக் கண்ட சிலர் ''சிறு குழந்தை என்றிருந்தால் இப்படித்தான் வீட்டில் ஏதாவது ஒரு பொருள் பாழகிக் கொண்டிருக்கும். இதற்காக நாம் குழந்தையைத் திட்டக்கூடாது. நாமும் வருத்தப் படக் கூடாது'' என்றனர். வேறு சிலரோ ''இவள் பெண் குழந்தையா? பத்திர காளி போலப் பேயாட்டம் அல்லவா ஆடுகிறாள்? அடடா! எவ்வளவு அழகான அபூர்வப் பொருள்களையெல்லாம் உடைத்து நாசப்படுத்தி விட்டாள்!'' என்று கரித்துக் கொட்டினார்கள்.

சொக்கநாதன் தன் மகளை ஏதாவது ஆவி பிடித்து ஆட்டுகிறதோ

—சிவனார் செல்வன்—

எனப் பயந்து அடுத்துள்ள பசுமலையில் இருக்கும் மந்திரவாதி மாயவனைக் கண்டு தன் மகளை ஏதாவது ஆவி பிடித்திருந்தால் அதை விரட்டுமாறு வேண்டிக் கொள்வது எனத் தீர்மானித்தான்.

இதே சமயம் திருநகருக்குப் பத்து மைல் தூரத்திலுள்ள பாலப்பட்டி என்ற ஊரில் பசுபதி என்ற ஏமாற்றுப் பேர்வழி இருந்தான். அவன் சில மாயா ஜால வித்தைகளைக் கற்று வைத்திருந்தான். அந்த வித்தைகளால் அவன் விலையுயர்ந்த வைரங்களைத் திருடி வந்தான். அதற்கு அவன் ஒரு சிறு மண் பொம்மை செய்து அந்த மனித மண் பொம்மையோடு வைர வியாபாரியின் கடைக்குப் போய் எப்படியோ யார் கண்ணிலும் படாமல் அங்கிருக்கும் விலையுயர்ந்த வைரக் கற்களை எடுத்து தன் மண் பொம்மைக்குள் வைத்து அழுத்தி மறைத்து விடுவான். வைரம் அந்த பொம்மைக்குள் போனதும் அப் பொம்மை யாராலும் உடைக்க முடியாத அளவிற்குக் கெட்டியாகி விடும். அதனால் யாராலும் அவனை திருடன் எனக் கூற முடியவில்லை. அவன் வீட்டிற்குப் போய் தான் கற்ற ரகசிய முறைப்படி அந்த பொம்மையை உடைத்து வைரங்களை எடுத்து பத்திரப்படுத்தி வரலானான்.

சொக்கநாதன் பசுமலைக்குப் போய் மந்திரவாதி மாயவனைக் கண்டு தன் மகள் சாருமதியின் செயல்கள் பற்றிக் கூறவே மாயவனும் ''சந்தேகமே இல்லை. அது ஆவியின் வேலைதான். நான் என் மந்திரக் கோலை ஆட்டி மந்திரம் போட்டால் அந்த துஷ்ட ஆவி ஆறு கடல் தாண்டி ஓடிப் போய்விடும். இப்போதே உங்கள் ஊருக்கு வந்து சாருமதியைக் கண்டு அவளைப் பிடித்த ஆவியை விரட்டுகிறேன்'' என்று கூறி உற்சாகத்துடன் சொக்கநாதனுடன் அவனது





ஊருக்குக் கிளம்பினான்.

சொக்கநாதன் வீட்டை அடைந்த மாயவன் சாருமதியைப் பார்த்து விட்டு ''சரி. இதற்கு ஒரு ஹோமம் செய்ய வேண்டும். அதற்கான சாமான் களை வாங்கிவாருங்கள்'' எனக் கூறித் தன் மந்திரக் கோலைக் கீழே வைத்து விட்டு ஹோமத்திற்கு வேண்டிய சாமான்கள் யாவை என்று சொக்க நாதனிடம் கூறலானான். அப்போது சாருமதி கீழே இருந்த மந்திரவாதியின் மந்திரக் கோலை எடுத்து வளைத் தாள். அது படீரென்ற சத்தத்தோடு இரண்டாகப் பிளந்து விழுந்தது.

அதைக் கண்ட மாயவன் ''ஐயோ! என் மந்திரக் கோல் ஒடிந்து பாழாகி விட்டதே. இனி நான் யாருக்கும் மந்தி ரிக்க முடியாதே'' என்று ஓலமிட்ட வாறே அங்கிருந்து ஓடிவிட்டான்.

இதைக்கண்ட சாருமதியின் பெற்றோ ரும் தம் மகளின் எதிர்காலம் எப்படி இருக்கப்போகிறதோ என்று எண்ணிக் கவலைப் படலானார்கள். சாருமதி எந்தக்கடினமான பொருளையும் எந்த மந்திரச் சக்திவாய்ந்த பொருளையும் தூக்கி எறிந்து உடைக்கவல்லவள் என்ற விஷயம் திருநகரைச்சுற்றியுள்ள பல ஊர்களில் பரவிவிட்டது.

இந் நிலையில் வைரங்களைத் திருடும் பசுபதி ரத்தினபுரி என்று ஊரி லுள்ள பெரிய வைர வியாபாரியின் கடைக்கு வழக்கம் போலத் தன் மண் பொம்மையுடன் சென்றான். அக் கடையில் வைரங்களை வாங்க வந்த வனைப் போல நடித்து யாருமே தன்னை கவனிக்கவில்லையென நினைத்து ஒரு விலையுயர்ந்த வைரத்தை எடுத்துத் தன் மண் பொம் மைக்குள் அமுக்கி வைத்தான். ஆனால் அவனது செயலை ஒரு மூலை யிலிருந்து பார்த்துவிட்ட ஒரு பணி யாள் உடனே தன் எஜமானனிடம் பசு பதி வைரத்தை எடுத்து பொம்மைக் குள் அமுக்கி வைத்ததைத்தான் பார்த்த தாகக் கூறிவிட்டான்.

கடையின் சொந்தக்காரனும் பசு பதியின் கையிலிருந்த பொம்மை யைப் பிடுங்கிக் கொண்டு ''இதற்குள் தானே நீ சற்று முன் திருடிய வைரத்தை ஒளித்து வைத்தாய்?'' என்று கோபத் தோடு கத்தினான். பசுபதியோ தான் எதையும் திருடவில்லை என்று ஒரே யடியாகச் சாதித்தான். ஆனால் கடைக் காரனோ ''நீ வைரத்தைத் திருடி இந்த பொம்மைக்குள் பதித்து வைத்ததை இந்த வேலையாள் தான் பார்த்தான்'' என்று தன்னருகே நின்ற வேலை

யாளைக் காட்டினான்.

வேலையாளும் பசுபதி வைரத்தைத் திருடியதை தான் பார்த்ததாகக் கூறினான். கடைக்காரனும் ''இவன் திருடிய வைரத்தின் மதிப்பு ஐந்து லட்சம் ரூபாய். இவனை விடக் கூடாது. இந்த பொம்மைக்குள்தான் வைரம் இருக்கிறது இதை உடைத்துப் பார்க்கலாம்'' என்றான். இதற்குள் கடைக்கு முன் வேடிக்கை பார்க்க மக்கள் கூட்டம் கூடிவிட்டது. பசுபதி தப்பி ஓடுவதற்கு வழி இல்லாமல் போய்விட்டது.

அப்போதும் அவன் பயப்படாமல் ''நீங்கள் தாராளமாக அந்த பொம்மையை உடைத்து அதற்குள் வைரம் இருக்கிறதா என்று பாருங்கள். உங்களால் இந்த பொம்மையை உடைக்கவே முடியாது. இது ஒரு விசேஷக் கலவையால் தயாரிக்கப்பட்டது'' என்றான் கடைக்காரனோடு மற்றும் சிலரும் சேர்ந்து கொண்டு ''இது மண் பொம்மைதானே. உடையாமலா போய் விடும்? இவன் ஏதேதோ சொல்லி நம்மை ஏமாற்றப் பார்க்கிறான். பொம்மையை நாம் உடைத்தே பார்க்கலாம்'' என்றார்கள்.

ஆனால் எவ்வளவு முயன்றும் அவர்களால் அப்பொம்மையை உடைக்க முடியவில்லை. அப்போது ஒருவன் ''இவன் ஏதோ மந்திரம் போட்டு இதை உடைய முடியாமல் செய்திருக்கிறான். அதனால் பொம்மையை பத்திரமாக எடுத்து வைத்து விடுங்கள். இல்லாவிட்டால் இதை எடுத்துக் கொண்டு ஓடிப் போனாலும் போய் விடுவான்'' என்றான்.

அப்போது அந்தக் கூட்டத்தில் திரு நகரிலிருந்து வந்த ஒருவன் இருந்தான். அவன் அந்த பொம்மையை யாராலும் உடைக்க முடியாமல் போனது கண்டு ''பொம்மையை யாராலும் உடைக்க முடியவில்லையா? எங்களூர் சாருமதியிடம்





இதைக் கொடுத்தால் ஒரு நிமிடத்தில் உடைத்துக்காட்டுவாளே'' எனக்கூறி அவள் ஒரு மந்திரவாதியின் மந்திரக் கோலையே எடுத்து ஒடித்த சம்ப வத்தை எடுத்துக் கூறினான்.

அதைக் கேட்ட வைரக்கடையின் எஜமானன் ''இந்த பொம்மைக்குள் என் கடையில் திருடப்பட்ட வைரம் இருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை. இந்த பொம்மையை உடைத்த பின் அதிலிருந்து என கடை யில் திருடப்பட்ட வைரம் வெளிப்பட் டால் பொம்மையை உடைத்தவருக்கு நான் ஒரு லட்சம் ரூபாய் பரிசாகக் கொடுக்கிறேன். இது போல இவன் எவ்வளவு இடங்களில் திருடி இருக்கி றானோ?'' என்றான்.

அப்போது பசுபதி ''இது என் பரம் பரைச் சொத்து. இதை யாராலும் உடைக்கவே முடியாது. சாருமதியா லும் கூட முடியாது. ஒருவேளை பொம்மை உடைந்து அதிலிருந்து வைரம் வெளிப்படா விட்டால் எனக்கு நஷ்ட ஈடாகப் பத்து லட்சம் ரூபாய் கொடுக்க வேண்டும்'' என்று சவால் விட்டான். கடைக்காரனும் ''ஆகா! தாராளமாகக் கொடுக்கிறேன் ஆனால் நீ எதிர்பார்க்கிறபடி பணம் கிடைக்காமல் அரசாங்க விருந்தாளி யாய் கைகளில் இரும்புக் காப்புக்களு டன் போகப் போகிறாய். எனக்கும் என் வைரம் கிடைக்கத் தான் போகி றது'' என்ற கூறி திருநகர் வாசியைத் தன் முன் வரச் சொன்னான்.

அவனிடம் ''நாம் இப்போதே இந்த பொம்மையை எடுத்துக் கொண்டு இவனையும் அழைத்துக் கொண்டு திருநகருக்குப் போவோம். நம்மோடு வருபவர்களும் வரலாம். அங்கு போய் சாருமதியிடம் பொம் மையை கொடுத்து உடைக்கச் சொல் வோம்'' எனக்கூற அங்கிருந்த பலரும் உற்சாகத்துடன் அதன் முடிவைக் காண ஆவலுடன் சென்றார்கள்.

அவர்கள் திருநகரின் எல்லையை அடைந்த போது அவர்களை அழைத்து வந்த திருநகர் வாசி ''அதோ! சாருமதியே வருகிறாளே'' என்றான் பிறகு அவனே சாருமதியைக் கூப்பிட்டு ''சாருமதி! இந்த பொம் மையை வாங்கிப் பார்'' என்று கூறி வைரக் கடைக்காரர் கையிலிருந்த பொம்மையை வாங்கி அவள் முன் நீட்டினான். சாருமதியும் அதை வாங் கிப் பார்த்துவிட்டு தரை மீது விட் டெறிந்தாள். பொம்மை சுக்கல் சுக்க லாக உடைந்து போயிற்று அதிலிருந்த

வைரம் வெளியே விழுந்தது.

இதைக்கண்ட பசுபதி திடுக்கிட்டு பயந்து ஓடப் பார்த்தான். ஆனால் அவனை நான்கு பேர்கள் வளைத்துப் பிடித்துக் கொண்டார்கள். வைரக் கடை எஜமானனும் ''இவனை அர சாங்கக் காவல் வீரர்களிடம் ஒப் படையுங்கள். இவனது வீட்டைச் சோதனை போட்டால் பல இடங் களில் இவன் திருடிய வைரங்கள் கிடைக்கும்'' என்றான். அவர்களும் பசுபதியை இழுத்துச் சென்றனர்.

இதற்குள் ஊர் எல்லையில் மக்கள் கூட்டமும் அதன் நடுவே சாருமதியும் இருப்பது கேள்விப்பட்டு என்ன நடந் ததோ என்று பதறிப் போய் சாருமதி யின் பெற்றோர்கள் அங்கு ஓடினார் கள். சாருமதி தன் பெற்றோர்களைக் கண்டதும் ஓடி வந்து நடந்ததை எல் லாம் கூறினாள். இதற்குள் வைரக் கடைக்காரன் அப் பெற்றோர்களுக்கு வணக்கம் செலுத்தி ''இவள் உங்கள் குழந்தை என்றார்கள். ஆனால் குழந்தை இல்லை. பெரிய பெண் ணாக இருக்கிறாள். எனக்கு இன்ன மும் விவாகமாகவில்லை. என் வைரத்தைக் கண்டு பிடித்துத் தருப வருக்கு லட்ச ரூபாய் பரிசளிப்பதாக அறிவித்திருந்தேன். இப்போது என்னையே பரிசாக அவளுக்குக் கொடுக்கிறேன்'' என்றான்.

இதைக் கேட்டதும் சாருமதியும் அவளது தாயாரும் சற்று தூரம் தள் ளிப் போய் நின்றனர். சாருமதியின் தந்தை ''இவளை இதுவரை குழந்தை என்று சொல்லியே வளர்த்து விட் டோம். எந்த சாமானை எடுத்து உடைத்தாலும் நாங்கள் இவள் குழந்தைதானே என்று கூறிப் பேசா மல் இருந்து விட்டோம். இவளோ பெரிய பெண்ணாகி விட்டாள். இவளுடைய திருமணம் எப்படி நடக்குமெனக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். ஏனென்றால் இவளை மணக்கத் துணிச்சல் கொண்டவன்தானே வரவேண்டும்? நீங்கள் வந்து எங்கள் கவலையைப் போக்கி விட்டீர்கள்'' என்றான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் வைரக் கடை எஜமானன் வைத்திய நாதனுக்கும் சாருமதிக்கும் திருமணம் சிறப்பாய் நடைபெற்றது இப்போது சாருமதி முந்தைய சாருமதி இல்லை தான்.



# தந்தை போலத்தான் மகன்!

பொன்னுசாமி விவசாயி மட்டுமல்ல, நெல், வாழை, மஞ்சள் என்றெல்லாம் வியாபாரம் செய்பவன். அவன் மகன் சின்னசாமி படிக்காமல் உதவாக்கரையாக ஊர் சுற்றி வந்தான். ஒருநாள் பொன்னுசாமியின் நண்பன் பழனிசாமி அவனைக் காண வந்தான்.

அப்போது அவன் பொன்னுசாமியிடம் ''என்னப்பா? நீ உன் மகனைப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பாமல் ஊர் சுற்ற விட்டிருக்கிறாயே. பிற்காலத்தில் அவன் உன் வியாபாரத்தை எப்படி கவனித்துக் கொள்ளப் போகிறான்?'' என்று கேட்டான்.

பொன்னுசாமியும் ''என் மகன் கெட்டிக்காரன். நானும் என் தந்தையும் பள்ளிக் கூடத்திற்கா போய்ப் படித்து விட்டு விவசாயமும் வியாபாரமும் செய்தோம்? எங்களக்குள்ள அறிவு என் மகனுக்கும் இருக்கிறது. அது போதும் அவனுக்கு'' என்றான்.

அப்போது சின்னசாமி அங்கு வரவே பழனிசாமி அவனைத் தன்னருகே அழைத்து ''நமக்கு மாம்பழம் எங்கிருந்து கிடைக்கிறது சொல் பார்க்கலாம்'' என்று கேட்டான். சின்னசாமியும் ''கூடையிலிருந்துதான்'' என்றான். அப்போது அவனது தந்தை ''என்னடா இது? சந்தையிலிருந்து கிடைக்கிறது என்று கூடச் சொல்லவா தெரியாது?'' என்றான்.

பழனிசாமி சின்னசாமிக்கும் அவனது தந்தைக்கும் எவ்வளவு அறிவு உள்ளது எனக் கண்டு தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டான்.





# மாமன்னர் அசோகர்

## 12

(மன்னன் பிந்துசாரன் இறந்தபோது அவனது மூத்த மகன் சுசிம்மனும் அடுத்த மகன் அசோகனும் தலைநகரில் இருக்கவில்லை. சுசிம்மன் மூத்த மகனென்ற காரணத்தால் பட்டத்திற்கு உரிமை கொண்டவனாயினும் அவன் கொடியவன், சுயநலக்காரன் எனக் கண்டு மக்கள் அவன் மன்னனாவதை விரும்பவில்லை. திறமைசாலியான அசோகனே மன்னனாக வேண்டுமென மக்கள் விரும்பினார்கள். ஆனால் அவ்விருவரில் யார் முதலில் பாடலிபுத்திரத்திற்கு வந்து பிந்து சாரனின் ஈமச் சடங்குகளைச் செய்வார் என்பதில்தான் முடிவு இருந்தது. அசோகன் சுசிம்மனுக்கு முன்னதாகத் தலைநகருக்கு வந்து பிந்து சாரனின் உடலுக்கு ஈமச் சடங்குகளைச் செய்தான். அவனை அவ்வாறு செய்ய விடாது தடுக்க முயன்ற சுசிம்மனின் மற்ற சகோதரர்கள் படை வீரர்களால் கொல்லப்பட்டனர். அதன் பிறகு-)

பிந்துசாரனின் மரணத்தாலும் அவனது ஆறு மைந்தர்கள் கொல்லப்பட்டதாலும் பாடலிபுத்திர நகரமே சோகக் கடலில் மூழ்கி இருந்தது. ஆனால் அந்த அரசகுமாரர்கள் இறந்ததற்கு அவர்களேதான் காரணம் என்பதை மக்கள் உணர்ந்தும் இருந்தார்கள்.

பிந்துசாரன் இறந்த போது மகத மக்கள் குறிப்பாக பாடலிபுர மக்கள் தாம் மிகவும் கவலைப்பட்டார்கள். ஏனெனில் பிந்துசாரனுககுப பறகு அவனது மூத்த மகன் சுசிம்மன் மன்னனாகி விடுவானோ என பயந்ததே அதற்குக் காரணம். சுசிம்மன் எவ்வளவு கொடியவன் என்பது அவர்களுக்குத் தெரியும். அவனுக்கு பதிலாக அடுத்து வயதில் பெரியவனான அசோகன் மன்னனாவதையே மக்கள் விரும்பினார்கள். சுசிம்மன் மன்னனாகி விடாமல் ஏதாவது செய்யுமாறு அவர்கள் கடவுளை வேண்டிக்கொண்



டார்கள்.

அவர்களது வேண்டுதல் வீண் போகவில்லை. பிந்துசாரன் இறந்த பின் சுசிம்மன் முதலில் வந்து ஈமச் சடங்குகளைச் செய்வானா என எதிர் பார்த்து அரசாங்கப் புரோகிதரும் முதலமைச்சரும் சேனாதிபதியும் காத்துப் பார்த்தார்கள். சுசிம்மனோ வரவில்லை. அசோகன்தான் வந்திருந் தான். எனவே அவர்கள் அசோகனை ஈமச்சடங்குகளைச்செய்யச்சொல்லி, அவன் அதைச் செய்து முடித்ததால் அவனே மன்னன் என அறிவித்து விட்டார்கள்.

நள்ளிரவில் அசோகன் மன்னனாகி ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். ஆனால் அவன் மகுடம் அணிய வில்லை. ஒரு நல்ல நாளில் பட்டாபி ஷேகம் முறைப்படி நடக்கும் போது தான் தன்னால் ராஜ மகுடத்தை அணிய முடியும் என்று அவன் கண்டிப் புடன் கூறிவிட்டான். அமைச்சர்களும் பிரபுக்களும் அவனது இக் கருத்தை வெகுவாகப் பாராட்டினார்கள். ஆனால் அவர்கள் மனதில் சுசிம்மன் வந்து என்ன செய்வானோ என்ற அச்சம் இருந்தது.

சுசிம்மனோ தட்சசீலத்தில் கேளிக் கையில் மூழ்கி இருந்தான். நடனமாது கள் கூறியதை நம்பி அசோகனால் எழுந்து நடக்கக் கூட முடியாது என்று எண்ணி விட்டான். அப்போதுதான் அவனது தாயார் ஒரு தூதனை அனுப்பி ''முன்பு உன்னை விரைவில் பாடலி புத்திரத்திற்கு வரும்படி செய்தி அனுப்பினேன். இப்போதோ நீ இங்கு வரக் கூடாது எனக் கூறுகிறேன். ஏனெனில் அசோகன் மன்னனாகி விட்டான். உன் மற்ற சகோதரர்கள் கொல்லப்பட்டனர். இனி நான் உன்னை வரச் சொல்லும் போது நீ வந்தால் போதும்'' என்ற செய்தியைத் தெரியப்படுத்தினாள்.

தூதவனிடம் பாடலிபுத்திரத்தில் என்ன நடந்தது என்று சுசிம்மன் கேட் டான். தூதவனும் ''மன்னர் இறந்ததும் தங்களுக்கும் அசோகருக்கும் அச் செய்தியைத் தெரிவித்தார்கள். மன்ன ரின் உடலுக்கு ஈமச் சடங்குகளைச் செய்ய நீங்கள் வந்து சேர்வீர்களென முதலமைச்சரும் அரசாங்க புரோகித ரும் எதிர்பார்த்தார்கள். நீங்கள் வராத தாலும் அசோகர் வந்து சேர்ந்ததாலும் அவரையே ஈமச்சடங்குகளை செய்யச் சொல்லி, ஈமச்சடங்குகள் முடிந்ததும் அவரை மகத மன்னனாக அறிவித்தும் விட்டார்கள்'' என்றான்.

அதைக் கேட்டு கோபமும் ஆத்திர மும் கொண்ட சுசிம்மன் ''அந்த அசோ கன் எப்படி மன்னனாகலாம்? நான் தான் என் தந்தையின் மூத்த மகன். அவருக்குப் பின் எனக்குத்தான் மன்ன னாகும் உரிமை உள்ளது. இப்போதே நான் என் படைகளுடன் பாடலிபுத்தி ரத்திற்குப் போய் அந்த அசோகனைக் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டு விட்டு நான் சிம்மாசனத்தில் அமரப் போகிறேன். என்னை யாராலும் தடுக்க முடியாது'' என்று அனல் கக்கு வது போல உறுமினான்.

அவனது கட்டளைப்படி படை பாடலிபுத்திரத்திற்குச் செல்லத் தயாரா கியது. அவன் அதனை நடத்திக் கொண்டு தட்ச சீலத்திலிருந்து கிளம் பவே இச் செய்தி ஒற்றர்கள் வாயிலா கப் பாடலிபுத்திரத்திற்கு விரைவில் எட்டியது. அசோகன் தன் அமைச்சர் களைக் கூட்டி அவர்களது யோசனை யைக் கேட்டான்.

அசோகன் அமைச்சர்களிடம் ''தட்சசீலத்திலிருந்து சுசிம்மன் வந்து கொண்டிருக்கிறான் அவன் படைக ளோடு வந்து கொண்டிருப்பதாகத் தான் நம் ஒற்றர்கள் கூறுகிறார்கள். அவன் இங்கு வந்து நம்மைத் தாக்கத் தான் போகிறான். அவனை நாம் எதிர்த்துப் போரிட வேண்டுமா அல் லது அவனுடன் சமாதானமாகப் போக வேண்டுமா என நீங்கள் கூறுங் கள்'' என்றான்.

அப்போது முதலமைச்சர் கல்லா டகர் ''இப்போது நீங்கள்தாம் எம் அரசர். உங்கள் அபிப்பிராயத்தை அறிந்து கொண்டு என்ன செய்யலாம் என்பதைக் கூறுகிறோம். ஆனால்



எதிரி படை எடுத்து வருகிறானென் றால் அதைச் சமாளிக்கவே வேண் டும்'' என்றார். மற்ற அமைச்சர்களும் ''ஆம்! சுசிம்மனின் படையை எதிர்த் துப் போரிடத்தான் வேண்டும்'' என்றார்கள்.

அசோகனோ ''போருக்கு முன் நம் முடன் சுசிம்மன் சமாதானமாகப் போக ஒரு வாய்ப்பை அளித்துப் பார்க் கலாம். அவன் தட்சசீலத்தில் என் பிரதி நிதியாக இருக்கச் சம்மதிக்கிறானா என்று கேட்டுப் பார்க்கலாம்'' என் றான். அப்போது ஒரு அமைச்சர் ''ஐயோ! இது விஷப் பரீட்சை, சுசிம் மனின் பொறுப்பில் தட்ச சீலத்தை விட்டால் அதை சுதந்திர நாடு என அறிவித்து விடுவான். அது கண்டு மற்ற அரசாங்கப் பிரதிநிதிகளும் தம் பகுதிகளையும் சுதந்திர நாடுகளாக



அறிவித்து விடுவார்கள். அதனால்
மகத சாம்ராஜ்யமே சிதைந்து போய்
விடும்'' என்றார்.

கல்லாடகரும் ''இந்த அமைச்சர்
கூறுவது சரியே. ஆயினும் மன்னர்
கூறுவது போல சுசிம்மனுக்கு ஒரு
வாய்ப்பை அளித்துப் பார்க்கலாம்.
அவன் நல்ல விதமாக நடந்தால் சரி.
துரோகம் செய்ய முயன்றால் அதை
ஒடுக்கலாம்'' என்றார். அப்போது
அசோகன் ''இப்படி நாம் ஒரு வாய்ப்
பளிப்பதாக அவனிடம் யார் தெரிவிப்
பது?'' என்று கேட்டான்.

கல்லாடகரும் ''நான் இந்தப்
பொறுப்பை ஏற்கிறேன். நான் வய
தானவன். முதலமைச்சர் பதவியில்
இருப்பவன். அவன் எனக்கு மரி
யாதை காட்டுவானென்றே நினைக்கி
றேன். நல்ல விதமாகப் பேசினால்
அவன் நான் சொல்வதைக் கேட்பா
னென்று நினைக்கிறேன். அவனிடம்
விஷயத்தை விளக்கி அவன் தட்ச
சீலத்தில் அசோகனின் பிரதிநிதியாக
இருக்கலாம் என்று கூறி அதற்கு
அவனைச் சம்மதிக்கவும் வைக்கி
றேன். நான் நம் தலைநகரின் தலை
வாசலில் மலர் மாலையுடன் நின்று
அவனை வரவேற்றுப் பேசுகிறேன்.
முதியவனான என்னை மதித்து அவன்
கண்டிப்பாக நான் சொல்வதைக் கேட்
பான்'' என்றார். அசோகன் ''எனக்
கென்னவோ சுசிம்மனை நம்ப இஷ்ட
மில்லை. அவனால் உங்களுக்கு
ஆபத்து நேரலாமோ என்று கூட அஞ்சு
கிறேன்'' என்றான்.

கல்லாடகரோ ''இம் முயற்சியில்
என் உயிர் போனால் என்னை விட
சுசிம்மனுக்குத்தான் நஷ்டம். அவனை
மக்கள் பதம் பார்த்து விடுவார்கள்''
என்றார். அசோகன் இதற்கு அரை
மனதாகத்தான் சம்மதித்தான். ஆனால்
கலலாடகருக்கு சுசிம்மனால் எவ்வித
ஆபத்தும் நேரக் கூடாது என எண்ணி
ரகசியமாகத் தலைவாயிலின் பக்கம்
படைவீரர்களை ஒளிந்து நிற்க ஏற்
பாடு செய்தான்.

கல்லாடகர் சுசிம்மனைத் தலை
நகரின் தலைவாசலில் நின்று எதிர்
பார்க்கலானார். அவர் சுசிம்மனைப்
பற்றி நன்கு அறிந்திருந்தாலும்
முதலமைச்சரானதான் சொல்வதை
அவன் பொறுமையாகக் கேட்
பானென நம்பிக்கை கொண்டிருந்தார்.
அவனுக்கு நல்ல விதமாக எடுத்தச்
சொல்லி அசோகனுடன் சமாதானமா
கப் போவதே அவனுக்கும் நல்லது,
நாட்டிற்கும் நல்லது என்பதை விளக்கி

னால் எல்லாம் சரியாகி விடும் என எண்ணினார்.

சுசிம்மன் வேகமாகத் தலைநகரின் வாசலை அடைந்தபோது கல்லாடகர் தன் கையிலிருந்த மலர் மாலையைக் காட்டியவாறே அவனை நிற்கும்படிக் கூறினார். அவனோ ''கிழட்டுப் பயலே! நீதானே அசோகனை மன்னனாக்கினாய்?'' என்று கேட்டுத் தன் வாளை உருவி அவரது தலையை வெட்டி விட்டான். ஆனால் அடுத்த நிமிடமே மறைந்திருந்த அசோகனின் வீரர்கள் அவன் மீது பாய்ந்தார்கள். அவர்களது தலைவன் கல்லாடகரின் மகனே. அவன் சட்டெனதன் வாளால் சுசிம்மனின் தலையை வெட்டி எறிந்தான். சுசிம்மனின் வீரர்கள் இது கண்டு செய்வதறியாமல் அசோகனின் படைவீரர்களிடம் சரணடைந்தார்கள். அவர்களும் மகதத்தின் வீரர்கள் தாமே. அதனால் எவ்வித எதிர்ப்பையும் காட்டவில்லை.

பாடலிபுத்திர மக்கள் சுசிம்மன் ஒழிந்தது கேட்டு நிம்மதியாக மூச்சு விட்டார்கள். ஆனால் முதலமைச்சர் சுசிம்மனால் கொல்லப்பட்டது அவர்களுக்கு மிகுந்த மன வருத்தத்தை அளித்தது. நேர்மையான நல்ல மனம் படைத்த அவரை இழந்தது நாட்டிற்கே பேரிழப்பு என யாவரும் எண்ணினார்கள். அசோகனின் துயரமோ வர்ணிக்க முடியாது போயிற்று.

அசோகன் தன் மகுடாபிஷேகத்திற்காக நல்ல முகூர்த்தத்தை எதிர் பார்க்கலானான். அவனது ஆட்சி நன்கும் திறமை மிக்கதாயும் இருந்ததால் மக்கள் அவனை மிகவும் விரும்பினர். சந்தர குப்த மௌரியனைப் போல



அவனும் புகழ் பெற்று விளங்க வேண்டுமென யாவரும் வாழ்த்தினர்.

இனி விதிஷா தேவியை பாடலி புத்திரத்திற்கு வரச் சொல்லி சிம்மாசனத்தில் அசோகனின் பக்கத்தில் உட்கார வைத்து பட்டாபிஷேகத்தை நடத்த வேண்டியது ஒன்றுதான் பாக்கி. ஆனால் அதில் இருந்த சிக்கல் என்னவென்றால் விதிஷா தேவி புத்த மதத்தினள். அவள் ஹிந்து மத சம்பிரதாயச் சடங்குகளை நம்பாததால் புரோகிதர்கள் அவளை ராணியாக ஏற்க மறுத்தனர். மேலும் விதிஷாதேவி உடல் நலம் குன்றி இருந்ததால் அவளது மருத்துவர்கள் அவள் பயணத்தை மேற்கொள்ளக் கூடாது என்றும் கூறி விட்டனர்.

ஆனால் பட்டாபிஷேகத்தை தள்ளிப் போட முடியாதே. மேலும் அப்



போது குறிப்பிடப்பட்ட முகூர்த்த வேளையைத் தவற விட்டால் ஐந்து வருடங்களுக்கு முகூர்த்த நாளே இல்லையாம். பட்டத்து ராணி இல்லாமல் மன்னனின் பட்டாபிஷேகம் நடக்க முடியாதே!

இந்நிலையில் புதிய முதலமைச்சரான ராதா குப்தர் ''அரசே! இப்போதுள்ள நிலையில் தாங்கள் இன்னொரு பெண்ணை மணந்து கொள்வதே ஏற்றது. உங்கள் மகன் மகேந்தரனும் புத்த மத நெறிகளைப் பயின்று வருகிறானாம். விதிஷாதேவிக்கு இனி மேல் குழந்தைகள் பிறந்தாலும் அவர்களும் புத்தமதத்தையே தழுவுவார்கள். போரில் நம்பிக்கை வைக்காத இளவரசன் மன்னனானால் அவனால் நாட்டைக் காக்க முடியாது. எனவே நீங்கள் வேறொரு பெண்ணை மணந்து மகன்களையும் மகள்களையும் அடையவேண்டும்'' என்றார்.

அசோகனோ இதற்கு இணங்கவில்லை. ஆனால் யசன் தன் சகோதரி அனுப்பிய செய்தியைக்கூறி ''விதிஷா தன் மனதாலும் உடல் வலிமையாலும் மன்னனின் பட்டத்து ராணியாக இருந்து தன் கடமைகளைச் செய்ய முடியாதென நினைக்கிறாள். அதனால் அவளே உங்களை வேறொரு பெண்ணை மணக்கும்படிக் கூறுகிறாள். எனவே நீங்கள் வேறொரு விவாகம் செய்து கொள்ளத்தான் வேண்டும்'' என்றான்.

அசோகனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. விதிஷா தேவியை மறக்க முடியாது என்றாலும் நாட்டின் நலனை அவன் கருதியாக வேண்டும். அதற்காக அவன் அமைச்சர்களும் யசனும் கூறுவது போல இன்னொரு பெண்ணை மணந்து பட்டத்து ராணியாகப் பட்டாபிஷேகத்தின் போது அரியாசனத்தில் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை என்பதை உணர்ந்தான். இன்னொருத்தியை அவன் மணந்து கொள்வதை விதிஷா தேவியும் விரும்புவது வேறு அவன் இன்னொரு பெண்ணை மணக்க வேண்டும் என்ற வாதத்தைப் பலப்படுத்தியது.

அசோகனும் அசந்தி மித்திரை என்ற பெண்ணை மணந்து கொண்ட பின் அவனது பட்டாபிஷேகம் கோலாகலமாக நடைபெற்றது. ஆனால் அவனால் விதிஷா தேவியையும் தன் மகனையும், மகளையும் மறக்க முடியவில்லை. இதே கவலை அவனை

வாட்டவே அவன் அரசாங்க வேலைகளை கவனியாமல் இருக்கலானான்.

இதைக் கண்ட முதலமைச்சர் ராதா குப்தர் சேனாதிபதி வீரசிங்கரிடம் ''இப்படியே நம் மன்னர் இருந்தால் சிறிது காலத்திற்குப் பிறகு சன்னியாசியாகி விடுவார் அவரை அரச அதிகாரம் என்ன என்று உணர வைக்க வேண்டும். அதற்கு ஏற்றது பிற நாடுகளுடன் அவரைப் போர் புரிய வைப்பதுதான். போரில் எதிரிகளைக் கொன்று குவித்துப் பெருமைப் பட்டுக் கொள்ளவே எந்த அரசனும் விரும்புவான். அதனால் அசோகரை எப்படியாவது பிற நாடுகளுடன் போர் புரிய வைத்து வெற்றியடையச் செய்ய வேண்டும்'' என்றார். வீரசிங்கரும் அது பற்றி அவருடன் வெகு நேரம் பேசி ஒரு முடிவுக்கு வந்தார்.

அச் சமயத்தில் கலிங்க மன்னர் இறந்து விட்டார் என்றும் அவருக்குப் பின் அரியணையில் அமர வாரிசு யாருமில்லை என்றும் செய்தி கிடைத்தது. நாட்டை சிற்றரசர்களின் ஒரு குழு ஆண்டு வருகிறது என்றும் தெரிந்தது. அதனால் முதலமைச்சர் ராதா குப்தரும் சேனாதிபதி வீரசிங்கரும் மன்னன் அசோகனைக் கண்டு ''ஒரு நல்ல அரசனின் ஆட்சியின் கீழ் சிற்றரசர்களும் இருக்கவே அந்த நாடு செழிப்புற்று பலமானதாக இருந்து வந்தது. இப்போது கலிங்க மன்னன் இறந்து விட்டான். அதனால் கலிங்கம் முன்போல வலிமையாக இல்லை. எனவே கலிங்கத்தின் மீது படை எடுத்து அதை நம் சாம்ராஜ்யத்தில் சேர்த்துக் கொண்டு விடலாம் என்று யோசனை கூறினார்கள்.

அசோகனும் ''சரி. நம் படைகளைத் தயார் நிலையில் வைத்திருங்கள். நம் ஒற்றர்களை முதலில் அந்த நாட்டிற்குள் அனுப்பி உண்மை நிலையை அறிய வேண்டும். சிற்றரசர்களிடையே பிளவை ஏற்படுத்த வேண்டும்'' என்றான்.

முதலமைச்சரும் ''அவற்றைச் செய்வோம். தாங்கள் கூறியபடியே நம் ஒற்றர்களை அனுப்புவோம். சிற்றசர்களிடையே பிளவை ஏற்படுத்துவோம். அதன்பின் தக்க சமயத்தில் நம் படைகளோடு போய் அந்நாட்டைத் தாக்கி நாம் கைப்பற்றி விடலாம்'' என்றார்.

**(தொடரும்)**






# சன்மானம் அளியுங்கள்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்தது 'மன்னனே! இந்தப் பயங்கர இரவில் இப்படி நீ ஏன் சிரமப் படுகிறாய்? ஏதாவது சிக்கலான பிரச்னை தோன்றியுள்ளதா? சில சமயங்களில் மாபெரும் பண்டிதர்கள் கூட சிக்கலான பிரச்னையில் அகப்பட்டுக் கொண்டு திகைப்பது உண்டு அவர்களுக்குப் பிரச்னையாக முளைத்தவன் முத்தப்பன் என்ற முழு முட்டாள். அவனை பற்றிய கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறி கதையைச் சொல்ல ஆரம்பித்தது.

ஒரு காலத்தில் ஹேமசந்திரன் என்ற மன்னன் இருந்தான். அவன் கலைகளை ரசிப்பவன். இலக்கியப் பிரியன்.

## வேதாளம் சொல்லும் கதை



அவனது தர்பாரில் பல கலைகளில் சிறந்து விளங்கியவர்களும் பண்டிதர் களும் ஆஸ்தான வித்வான்களும் பதவி வகித்து வந்தார்கள். மன்னன் எங்கு சென்றாலும் இந்த எல்லாப் பண்டிதர்களையும் தன்னோடு அழைத்துச் செல்லும் பழக்கத்தைக் கொண்டிருந்தான் அவர்கள் கூறும் நயங்களைக் கேட்டு மகிழ்ந்தும் வந் தான்.

அவனது நாட்டில் புலி குளம் என்ற கிராமம் இயற்கை அழகிற்குப் பெயர் பெற்ற இடம். அது பற்றிக் கேள்விப் பட்ட மன்னன் ஹேமசந்திரன் தன் பண்டிதர்களுடன் அக்கிராமத்திற்குப் போய் ஊர் எல்லையில் கூடாரங்கள் அடித்து அவற்றில் பண்டிதர்களையும் வீரர்களையும் தங்க வைத்துத் தானும் தன் தனிக் கூடாரத்தில் தங்கினான். அவர்களுக்கு மற்ற வசதிகளை ஊர் பிரமுகர்கள் செய்து கொடுத்தனர்.

அந்த ஊரில் முத்தப்பன் என்ற முழு மூடன் ஒருவன் இருந்தான். அவன் தன்னை மேதாவி என நினைத்து கொண்டு அவ்வூரிலுள்ள படித்தவர் களிடம் விதண்டாவாதம் புரிவான். அதனால் வீண் வம்பு எதற்கு என்று அவர்கள் அவன் மாபெரும் மேதை என்று கூறி விட்டுப் போகலானார்கள். இதனால் அவன் தன்னை விட மேதாவி யாருமே இல்லை என்று கர்வம் கொண்டு விட்டான்.

முத்தப்பனுக்கு முக்தா என்ற தங்கை ஒருத்தி இருந்தாள். அவள் மிக வும் அழகானவள். நல்ல புத்திசாலி. ரம்பையின் அழகைக் கூடத் தோற்க டிக்கும் முக்தாவை மணக்க அவ்வூரின் இளைஞர்கள் போட்டி போடலானார் கள். அதனால் அவர்கள் முத்தப்பனின் மனம் குளிர அவனை மாபெரும் பண்டிதர் என்றும் கவிஞர் திலகம் என்றும் பலவாறு புகழலானார்கள். இதனாலும் முத்தப்பனின் கர்வம் அதிகரித்து விட்டது.

மன்னன் ஹேமசந்திரன் பண்டிதர் களுடன் தன் ஊரருகே முகாமிட்டிருப் பதை அறிந்து முத்தப்பன் ஆஸ்தான வித்வான்களைச் சந்தித்து ''நான் ஒரு மாபெரும் மேதை. இவ்வூரில் எந்தப் பண்டிதரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள். எல்லோரும் என்னை மாபெரும் மேதை என்றே கூறுவார்கள். அதனால் நீங்கள் எல் லோரும் எனக்கு சன்மானம் அளித்து கௌரவிக்க வேண்டும்'' என்று மிடுக் காகக் கூறினான்.

ஆஸ்தான வித்வான்களும் அவன்

ஒரு மேதை என எண்ணிப் பல சாத்திரங்களில் கேள்விகளைக் கேட்டனர். அவற்றிற்கு அவனளித்த பதிலைக் கேட்டு அவர்கள் ''நீ வடிகட்டின முட்டாள். நீ எந்த சாஸ்திரத்தையும் படித்தவனாகத் தெரியவில்லை. நாங்கள் கேட்ட எந்தக் கேள்விக்கும் உன்னால் சரியான பதிலைக் கூற முடியவில்லையே. உன்னையா இவ்வூரின் பண்டிதர்கள் மாமேதை என்று போற்றிப் புகழ்கிறார்கள்? இல்லை உன்னைக் கேலி செய்யவே உன்னை மாபெரும் மேதை என்று எல்லோரும் கூறிவருகிறார்கள் என்பது நன்கு புரிகிறது'' என்றார்கள்.

அது கேட்டு முத்தப்பன் ''நான் உங்களிடம் என்னை கௌரவிக்கும் படித்தான் கேட்டேனேயொழிய என்னைப் பரீட்சிக்கும்படிக் கூறவில்லையே. நான் என்ன சொன்னேன் என்பதைக் கூட புரிந்து கொள்ள முடியாத உங்களை எல்லாம் மன்னர் எப்படித்தான் ஆஸ்தான வித்வான்களாக நியமித்தாரோ?'' என்று கோபம் கொண்டு உறுமினான். பண்டிதர்களோ அவன் கூறியதைக் கேட்டு சற்றும் கோபம் அடையாமல் ''அப்பனே! நீ கேட்ட இந்தக் கேள்விக்கு எங்களால் பதில் சொல்ல முடியாது. நீயே போய் மன்னரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டு பதிலைத் தெரிந்து கொள். அதோ தெரிகிறதே அது தான் மன்னரின் கூடாரம்'' எனக் கூறி சற்று தூரத்திலுள்ள ஒரு கூடாரத்தைச் சுட்டிக் காட்டினார்கள்.

முத்தப்பன் உடனே மன்னரின் கூடாரத்தற்குப் போய் மன்னனைக் கண்டான். மன்னனின் அழகைக் கண்டு அவன் ஆச்சரியப்பட்டு ''அரசே! தாங்கள் இவ்வளவு அழகாக இருக்கிறீர்களே. ஆனால் உங்களது ஆஸ்தான வித்வான்கள் ஏன் இவ்வளவு மோசமாக இருக்கிறார்கள்? அவர்களை எப்படித்தான் தர்பாரில் நியமித்தீர்களோ?'' என்று கேட்டான்.



இதைக் கேட்டதுமே. அவனுக்கு எவ்வளவு அறிவு என்பதை மன்னன் புரிந்து கொண்டுவிட்டான். ஆனாலும் அவன் முத்தப்பனிடம் ''நீ என் ஆஸ்தான வித்வான்களிடம் என்ன குறையைக் கண்டு விட்டாய்? என்று கேட்டான். முத்தப்பனும் ''அவர்கள் எனக்கு சன்மானம் அளித்து கௌரவிக்க மறுத்து விட்டார்கள். ஒரு பெரும் மேதையை மதிக்க அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும். நீங்கள் அவர்களுக்கு அறிவுரைகள் கூறி அவர்

TA-F4

கள் என்னை கௌரவித்தேயாக வேண்டுமென்று சொல்லுங்கள். அப்படி அவர்கள் செய்யத் தவறினால் அவர்களைக்கூண்டோடு பதவி நீக்கம் செய்துவிடுங்கள்'' எனக் கூறினான்.

மன்னனும் ''சரி, நீ சொன்ன படி நான் செய்யாவிட்டால் நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டான். அதற்கு முத்தப்பனால் உடனடியாக பதில் சொல்ல முடியவில்லை. மன்னனும் அவனுக்கு எரிச்சலை மூட்ட ''ஓ! மாமேதை யோசனை செய்கிறாரோ? என் கேள்வி புரிந்ததா? பதில் சொல். நீ சொன்னதை நான் கேட்காவிட்டால் என்னை என்ன செய்து விடுவாய்?'' என்று கேட்டான்.

இம்மாதிரி அவ்வூர் இளைஞர்கள் அவனிடம் கேள்வி கேட்டபோது அவன் அவர்களுக்குக் கூறிய பதில் நினைவிற்கு வந்தது அவர்களுக்கு அவன் கூறிய பதில் தன் தங்கையை அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்க முடியாது என்பதுதான். அது நினைவுக்கு வந்ததும் அவன் மன்னனிடம் ''நான் என்ன செய்வேன் என்பதை சொல்ல மாட்டேன் ஆனால் என்ன செய்யமாட்டேன் என்பதைச் சொல்கிறேன். எந்த மகாராஜாவும் என் பதிலடிக்குப் பணிந்துதான் ஆக வேண்டும் என்றான்.

மன்னனும் ''ஓ! நீ என்ன செய்ய மாட்டாய் என்பதைச் சொல் அதைத் தான் கேட்கலாமே'' என்றான். முத்தப்பனும் ''நான் என் தங்கையை உங்களுக்குத் திருமணம் செய்து வைக்க மாட்டேன். தெரிந்ததா?'' என்றான் இதைக் கேட்டதும் மன்னனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஆயினும் இப்படிப்பட்ட முட்டாளின் தங்கை எப்படி இருப்பாள் என்பதைக் காண அவன் ஆவல் கொண்டான். அவளும் இவனைப் போல முட்டாளோ என்று அறிய அவளிடம் பேசிப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு



ஏற்பட்டது.

அதனால் அவன் முத்தப்பனிடம் ''நான் உன் தங்கையை ஒருமுறை பார்த்து விட்டு உனக்கு சன்மானம் அளித்து கௌரவிக்கும் விஷயம் பற்றி முடிவு செய்கிறேன்'' என்றான். முத்தப்பனும் அதற்கு இணங்கி மன்னனைத் தன்னோடு தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அங்கு மன்னன் முக்தாவின் அழகைக் கண்டு மலைத்துப் போனான். அவளிடம் கொஞ்ச நேரம் பேசியதில் அவள் மிகவும் புத்திசாலி என்று மன்னன் அறிந்து கொண்டு விட்டான். அவன் அவளிடம் ''உன் போன்ற அழகி ராணியாகத் தகுதி பெற்றவள். நீ என்னை மணந்து கொள்ள சம்மதிக்கிறாயா?'' என்று கேட்டான்.

அப்போது முத்தப்பன் குறுக்கிட்டு ''அரசே! உங்கள் ஆஸ்தான வித்வான்கள் எனக்கு சன்மானம் அளித்து கௌரவித்தாலே இந்தத் திருமணம் நடக்குமென நான் ஏற்கனவே கூறி இருக்கிறேன். இதற்கு நீங்களும் ஒப்புக் கொண்டீர்களே'' என்றான். மன்னனோ எரிச்சலடைந்து ''நாங்கள் இருவரும் ஒருவரை மற்றவர் விரும்பும் போது நடுவே குறுக்கிட நீ யார்? வேண்டுமானால் நீ கேட்கும் பணத்தைக் கொடுக்கிறேன். வாங்கிக் கொள். பைத்தியக்காரத்தனமாக ஏதாவது உளறிக் கொண்டிராதே'' என்றான் கடுங்குரலில்.

அதைக் கேட்ட முக்தா ''அரசே! இவன் என் தமையன். அவன் கேட்டது ஒன்றும் மிகப் பெரிதும் அல்லவே. தங்களால் இதைச் செய்யவும் முடியும். நான் உங்களை மணக்க இந்த ஒரு சர்வசாதாரணச் செயலைத் தாங்கள் செய்யக் கூடாதா?'' என்று கேட்டாள். மன்னனும் அவள் கூறுவது நியாயமானதே என்று சொல்லிவிட்டுத் தன் கூடாரத்திற்குச் சென்றான். அங்கு அவன் தன் ஆஸ்தான வித்வான்





களையும் வீரர்களையும் கூட்டி நடந்ததை எல்லாம் அவர்களிடம் கூறி ''நான் முக்தாவை மணக்க ஆஸ்தான வித்வான்களான உங்களது ஒத்துழைப்பு தேவை அந்த முத்தப்பனின் விருப்பத்தை நிறைவேற்றினாலே இந்தத் திருமணம் நடக்கும் அவனோ நீங்கள் அவனுக்குப் பரிசளித்து கௌரவித்தாலே தன் தங்கையை எனக்கு மணம் செய்து வைப்பதாகக் கூறுகிறான். அவனது தங்கையோ அவனைப் போல முட்டாளல்ல. நல்ல அழகியும் கூட. அவளும் என்னால் இந்த சிறு உதவி கூடச் செய்ய முடியாதா என்று கேட்கிறாள். எனவே நீங்கள்தாம் என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்'' என்றான்.

ஆஸ்தான வித்வான்களும் ''நீங்கள் கூறுவது போல ஒரு முட்டாளை நாங்கள் கௌரவிப்பது சரியல்ல. இதனால் எங்களுக்கு மட்டும் அவமானமல்ல, உங்களுக்கும்தான். இப்படிச் செய்வதைவிட நாங்களே பதவி விட்டு விலகிவிடுகிறோம்'' என்றார்கள். மன்னனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. முக்தாவை விட்டு விட மனமில்லை. ஆஸ்தான வித்வான்களை இழக்கவும் தயாராக இல்லை. இது அவனுக்குப் பெரும் பிரச்னையாகி அவனைக் கவலையில் ஆழ்த்தியது.

இந்த விஷயம் முக்தாவிற்குத் தெரிந்தது. அவள் எல்லா ஆஸ்தான வித்வான்களையும் தன் வீட்டிற்கு வரும்படி வேண்டி செய்தி அனுப்பினாள். அவர்கள் வந்ததும் வரவேற்று ''நீங்களெல்லாம் பண்டிதர்கள். உங்களது புலமை மன்னருக்கு உதவாது இருப்பது எனக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது'' என்றாள்.

அவர்களோ ''மன்னருக்கு எங்கள் புலமையும் அறிவுத் திறனும் உதவிக் கொண்டேதான் வந்திருக்கிறது. ஒரு முட்டாளின் தங்கையை அவர் மணந்து கொள்ளக் கூடாது என்றும் முயற்சி செய்து கொண்டிருக்கிறோம்'' என்றார்கள். அவளும் ''ஏன் அப்படி முயல்கிறீர்கள்?'' என்று கேட்கவே அவர்களும் ''நாங்கள் ஒரு முட்டாளுக்கு சன்மானம் அளித்து கௌரவிக்க வேண்டுமாம். அந்த முட்டாள் வேறு யாருமல்ல, உன் அண்ணனே'' என்றனர்.

அவளும் ''என் அண்ணன் சன்மானம் பெற்று கௌரவிக்கப்படத் தக்கவனே என நான் நிரூபிக்கட்டுமா?'' என்று கேட்டாள். பண்டிதர்

களோ ''உன் அண்ணனுக்கு அறிவே இல்லை. எந்த அடிப்படையில் அவனை கௌரவிப்பது?'' என்று கேட்டார்கள். அவளும் ''அந்த அடிப் படைக்கு எவ்வித அறிவும் அவனுக் குத தேவையில்லை. எனக்குள்ள உலக அனுபவமே போதுமானது'' என்றாள். அதன் பின் தன்னை மணக்க விரும்பி அயல் நாடுகளிலிருந்து வந்த இளைஞர்கள் கொடுத்த பரிசுகளை அவள் அவர்களுக்குக் காட்டினாள். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பெட்டியில் வைக்கப்பட்டிருந்தன.



ஒரு பெட்டியில் ஒரு வேப்பங்குச்சி தான் இருந்தது. அது சந்தனபுர நாட்டி லிருந்து வந்ததாம். அந்த நாட்டில் எங்கு பார்த்தாலும் சந்தன மரங்கள் தாம் உள்ளனவாம். சமையலுக்குக் கூட அந்த நாட்டு மக்கள் சந்தனக் கட்டைகளையே பயன்படுத்துகிறார் களாம். ஆனால் அந் நாட்டில் ஒரு வேப்ப மரம் கூடக் காணக் கிடைக் காதாம். எனவே வேப்பங்குச்சியை அபூர்வப் பொருளாகக் கருதி அந் நாட்டிலிருந்து வந்த இளைஞன் அதைப் பரிசாகக் கொடுத்திருக்கிறா னாம்.

மற்றொரு பெட்டியில் தாமிர மோதிரம் இருந்தது. அதை சொர்ண தேசத்திலிருந்து வந்த இளைஞன் கொடுத்தானாம். அந்த நாட்டில் தங்கச் சுரங்கங்கள் ஏராளமாக உள்ளனவாம். ஆனால் தாமிரம் கிடைப்பது அரிதாம். அதனால் தான் தாமிர மோதிரம் விலையுயர்ந்தது என எண்ணி அவன் அதைக் கொடுத்திருக்கிறான்.

இன்னொரு பெட்டியில் கருப்புப் படிக்கல் இருந்தது. அது கரிமுக நாட் டின் அபூர்வப் பொருளாம். இவ்வாறு பல பொருள்கள் அந்தந்த நாட்டின் அபூர்வப் பொருளாகக் கருதி பரிசாகக் கொடுக்கப்பட்டிருந்தன. பட்டுத் துணிகள், கம்பளங்கள், வேலைப் பாடு மிக்க நகைகள், கலையம்சம் கொண்ட பொருள்கள் என்று பல வற்றை முக்தா பண்டிதர்களுக்குக் காட்டினாள்.

முடிவில் அவள் ''இவற்றைக் கொண்டு என் அண்ணனின் மதிப்பை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்'' என்றாள். அவர்களோ ''இவற்றால் உன் அண்ணனின் மதிப்பு எப்படி உயர்ந்து விட்டது என்பதை நீயே சொல்'' என்றனர். முக்தாவோ ''நீங் கள் பண்டிதர்கள். உங்களாலா ஊகிக்க முடியாது?'' எனக் கூறி அவர்களை வணங்கினாள். அவர்களும் ஓரிரு

நிமிடங்கள் யோசித்து விட்டுப் புன்னகை புரிந்தனர் அவர்களில் வயதானவர் எழுந்து ''பெண்ணே! நீ கூறியதைக் கேட்ட பின் எங்களுடைய அகங்காரம் அழிந்தது. முட்டாளும் கௌரவப்படுத்தப்படலாம் என யாரும் இது போல விளக்கியது இல்லை. உன் மாதிரிப் பெண் நாட்டின் ராணியாவது நாட்டிற்கே நன்மையாகும். இதற்காக நாங்கள் உன் அண்ணனை சன்மானித்து கௌரவிக்கிறோம்'' என்று கூறினார். மற்ற பண்டிதர்களும் அவர் கூறியதே தம் கருத்தும் எனக் கூறினார் கள்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''மன்னனே! முட்டாளையும் கௌரவிக்கலாம் என்ற முடிவிற்கு வந்த ஆஸ்தான வித்வான்களை என்ன என்று சொல்வது? முதலில் அவர்கள் மறுத்தார்களே. அவனைப் பரீட்சித்துப் பார்த்தார்களே. பலசாத்திரங்களில் கேள்விகளைக் கேட்டுப் பார்த்தார்கள். அவனால் ஒரு கேள்விக்குக் கூட பதில் சொல்ல முடியவில்லையே. இப்படிப்பட்ட அடி முட்டாளையா கௌரவிக்க பின்னர் சம்மதித்தார்கள்? இதற்கு என்ன காரணம்? இக் கேள்விக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''உலகில் ஓரிடத்தில் மிக அரிதான பொருள் வேறொரு இடத்தில் சர்வ சாதாரணமாக எங்கும் கிடைக்கும். ஒரு வேப்பங்குச்சியோ, தாமிர மோதிரமோ ஏதோ ஒரு நாட்டில் விலையுயர்ந்த பொருளாக மதிக்கப்படுகிறது. ஏனெனில் அந்தந்த இடங்களில் அவை அபூர்வ பொருள்களாக இருப்பதால் அவை மிக விலையுயர்ந்த பொருள்களாகக் கருதப்படுகின்றன. அது போல முட்டாளும் ஏதோ ஓரிடத்தில் மதிப்புள்ளவனாகக் கருதப்படுவான். இதைத்தான் முக்தா சூசகமாக உணர்ந்த்தினாள். பண்டிதர்கள் இதை உணர்ந்ததோடு நாட்டின் நலனையும் கருதியே முத்தப்பனை கௌரவிக்க இசைந்தனர் என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# சுந்தர்வனங்களும் அவற்றிற்கு அப்பாலும்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




கல்கத்தாவிலிருந்து கிளம்பி முதலில் அசிகாட்டை அடைகிறோம். 1840ல் இங்குதான் சீனர்கள் முதலில் வந்து குடியேறினார்கள். எனவே இது சீன நகரம் என அழைக்கப்படுகிறது.

தென் முகமாக ஹுக்ளி எனப்படும் கங்கை நதி திரும்பி கடலில் கலக்கும் போது பரந்த கடைமுகப் பகுதியை ஏற்படுத்தியுள்ளது. இது டைமண்ட் ஹார்பர் பகுதி. ஒரு காலத்தில் முன்பு கிழக்கிந்தியக் கம்பெனியின் கப்பல்கள் இங்குதான் வந்து நின்றன. இப்போது இப்பகுதியில் மோட்டார் படகுகளே செலுத்தப்படுகின்றன.

இத்துறைக்கு தெற்கே கங்கையும் பிரம்மபுத்திராவும் சேர்த்து செழிப்பான டெல்டா பகுதியை உண்டாக்கியுள்ளன. இந்நதிகள் கொண்டு வரும் வண்டல் மண்ணால் புதிய நிலப் பகுதிகளும் தீவுகளும் கிழக்கே கடலில் உருவாகின்றன. கடல் அரிப்பினாலும் நிலப் பகுதிகள் சில மறைந்தும் போகின்றன.

டெல்டாப் பகுதியில் பெரிய காடுகளும் சதுப்பு நிலங்களும் வங்காள விரிகுடாவில் கல்கத்தாவிலிருந்து பங்களாதேஷ் வரை கிழக்கில் பரவியுள்ளன.

**புலியை ஏமாற்ற முகமூடி அணியும் மீனவர்கள்**



இவை 15,500 ச.கி.மீ பரப்பில் பரவி உலகின் மிகப் பெரிய தோப்பைக் கொண்டுள்ளன.

இங்குள்ள காடுகள் சுந்தர் வனங்களென அழைக்கப்படுகின்றன. இங்கு சுந்தரி மரங்கள் உள்ளன. இக்காடுகள் அரண் போல் இருந்து கல்கத்தாவையும் அதன் சுற்றுப் பகுதிகளையும் கடல் அலைகளிலிருந்து பாதுகாக்கின்றன. இரவில் லட்சக் கணக்கான மின் மினிப் பூச்சிகள் பறந்து இப்பகுதியை அழகாக்குகின்றன. படகுகள் இங்கு மரவேர்களினிடையே தான் செல்ல வேண்டியுள்ளது. சுந்தரி, கேர்வா, கோரன், தண்டுப் மரங்களும் கேவா என்ற ஒருவகைப் புல்லும் இந்த உப்பான சதுப்பு நிலத்தில் பெரும் அளவில் விளைகின்றன.



வங்காளத்தின் புலிகள்

இங்கு காணப்படும் மிருக வகைகள் போல உலகில் வேறு எங்கிலும் காண முடியாது. புகழ் பெற்ற வங்காளப் புலிகள் இப்பகுதியில் கொடூர முதலைகள், சுரா மீன்கள், பெரிய பல்லிகள், பறவைகள், மீன்கள், ஆமைகள், பாம்புகள், தேனீக்கள், நண்டுகள், நத்தைகளெனப் பல வகைப்பட்ட உயிரினங்களிடையே வாழ்கின்றன.

இந்த அடர் காட்டில் 300 லிருந்து 500 புலிகள் உள்ளன. உலகில் இவைதான் தற்போது இந்த அளவில் உயிருடன் இருப்பவை. இவை நீரில் நீண்ட தூரத்திற்கு நீந்தவும் முடியும். இப்பகுதி வாழ் மீனவர்களும் தேன் சேகரிப்பவர்களும் எந்த நிமிடமும் புலியின் தாக்குதலை எதிர்பார்த்தே எச்சரிக்கையுடன் இருப்பார்கள். அவர்கள் தங்கள் பின் தலையில் முகமூடி அணிகிறார்கள். இதனால் மனிதன் தன்னைப் பார்க்கிறான் என புலி எண்ணி அவனை தாக்காதாம். மனிதர்கள் காட்டில் நுழையு முன் தக்ஷிணிராய் என்ற கானக தேவியை வணங்கி விட்டே செல்வார்கள்.



இங்கு காடுகள் கண் மூடித்தனமாக முன்பு அழிக்கப்பட்டதால் இப்போது இதைப் பாதுகாப்புப் பகுதி என அறிவித்திருக்கிறார்கள்.

ஹலிடே கஜ்னகலி, லோதியன் ஆகிய தீவுகள் 1978ல் வனவிலங்கு சரணாலயங்களாக அறிவிக்கப்பட்டன. 'புலித் திட்டம் அறிவிக்கப்பட்டது. புலிகளை வேட்டையாடுவது தடை செய்யப்பட்டது. அடர் தோப்புதேசியப் பூங்காவாகவும் புலிவாழ் இடமாயும் 1984ல் அறிவிக்கப்பட்டது. சுந்தர் வனக்காடுகள் உலகின் பழங்காலக் காடாக ஏற்கப்பட்டுள்ளது.

கங்கையின் கடை முகத்திலுள்ள 102 தீவுகளில் சாகர் தீப்தான் பெரியது. இங்கு அடிக்கடி கவியரசர் ரவீந்திரர் சென்று தம் படைப்புகளை எழுதி வந்தாராம். இத்தீவின் தென்முனை தான கங்காசாகர் என்று அழைக்கப்படுகிறது. இங்கு மகர சங்கிராந்தியன்று (ஜனவரி 14) கங்கையில் புனித நீராட மக்கள் கூட்டம் கூட்டமாய் வருகிறார்கள். நீராடிய பின் கபில முனிவர் ஆலயத்திற்குச் சென்று வழிபடுகிறார்கள். அது சமயம் இங்கு மூன்று நாட்களுக்குத் திருவிழா நடைபெறுகிறது.

இங்கு பழைய கலங்கரை விளக்கம் ஒன்று உள்ளது. 1821ல் இது 26 மீ. உயரமாகக் கட்டப்பட்டது. இதனுடைய வெளிச்சம் கடல் பகுதியில் 16 கி.மீ. வரை தெரிகிறது.

வங்காள விரிகுடாவில் கல்கத்தாவிலிருந்து ஆயிரம் கி.மீ. தெற்கே போர்ட்ப்ளேர் அந்தமான், நிகோபார் தீவுகளில் உள்ளது. இவை பிறைவடிவில் 780 கி.மீ தூரத்திலுள்ள தீவான பாண்ட் ஃபால் மைன்மாரிலிருந்து (பர்மா) 190 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தீவுகளின் தென் முனையிலுள்ள கிரேட் கோபார் இத்தோனேசியாவிலிருந்து 150 கி.மீ. தொலைவில்தான் உள்ளது.

அந்தமான் என்ற பெயர் ஹனுமான் என்ற சொல்லிலிருந்து ஏற்பட்டதாகும்.

**கங்கா சாகரில் கபில முனிவர் ஆலயம்**





அந்தமானில் ஒரு கடற்கரை

மலேயர்கள் இத்தீவுகளை வெகு காலமாக அறிந்திருந்தார்கள். அவர்கள் ஹனுமானை ஹண்டுமான் எனக் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் இத்தீவுகளுக்கு ஹண்டுமான் தீவுகள் எனப் பெயரிட்டதால் நாளா வட்டத்தில் அப்பெயர் அண்டமான் என்றாகி விட்டது.

நிகோபார் தீவுகள் நக்க வரம் என அழைக்கப்பட்டது. இதன் பொருள் நிர்வாணம் என்பதாம். ஒரு வேளை இங்குள்ள பழங்குடி மக்களை முதலில் பார்த்தவர்கள் அவர்கள் நிர்வாணமாக இருந்ததைக் கண்டார்கள் போலும், 15ம் நூற்றாண்டில் இங்கு வந்த போர்த்துக்கீசியர் இதனை நகு பார் தீவுகள் என்றனர். இது பிற்காலத்தில் நிகோபார் தீவுகள் என்றாகியது.

ஆங்கிலேயர் ஆட்சியில் வட அந்தமானுக்கு ஆயுள் தண்டனை பெற்ற கைதிகள் அனுப்பப் பட்டனர். 1857 சிப்பாய் கலகத்தில் ஈடுபட்டவர்கள், விடுதலைப் போர் வீரர்கள் எனப் பலரை அனுப்பினர். இங்கு நீர் கருப்பாக குடிக்க ஏற்றதாக இல்லாததால் 'காலா பானி' எனக் கூறப்பட்டு இங்கு அனுப்பப்படும் கைதிகளுக்கு காலா பானி தண்டனை வழங்கப்பட்டது என மக்கள் கூறலாயினர்.

ஆனால் இது சரியல்ல என நிரூபிக்கப்பட்டது. 1956 நவம்பர் முதல் தேதியன்று அந்தமான் நிகோபார் தீவுகள் இந்திய யூனியன் பிரதேசமாக ஆகி விட்டது.



அந்தமான் மீனவர்கள்



# மாப்பிள்ளையின் தகுதி

அனந்தய்யர் பட்சணக் கடை மிகவும் புகழ் பெற்றது. அவர் தயாரித்து விற்கும் இனிப்பு, கார வகை பட்சணங்கள் மிக ருசியாக இருந்ததால் அவருடைய வியாபாரம் நன்கு நடந்து வந்தது. அவரது ஒரே மகள் காவேரி அவளை மணக்கும் இளைஞன் அனந்தய்யரின் பட்சணக் கடைக்கும் சொந்தக்காரனாகி விடுவான்.

அனந்தய்யரும் காவேரிக்கு ஏற்ற கணவனைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் இறங்கினார். அப்போது கோபாலய்யர் என்பவரின் மகனைப் பற்றி அவருக்குத் தெரியவந்தது. பையனுடைய குணம்நடத்தை முதலியவை பற்றி விசாரித்துத் திருப்தி அடைந் அனந்தய்யர் கோபாலய்யரைக் கண்டு தன் மகளை அவரது மகனுக்கு மணம் செய்து கொடுக்க விரும்புவதாகக் கூறி ''ஒரு சிறு வேண்டுகோள். திருமணத்தை நிச்சயித்துக் கொள்வதற்கு முன் மணமகன் ஒரு நாள் என் வீட்டில் விருந்து சாப்பிட வேண்டுமென்று ஒரு யோகி கூறியுள்ளார். அதன்படி உங்கள் மகனை என் வீட்டில் விருந்து சாப்பிட அனுப்புங்கள். அவன் விருந்தைச் சாப்பிட்டு முடித்த பிறகுதான் என் மகனை மணக்கத் தகுதிபெற்றவனா என்பதைக் கூற முடியும்'' என்றார்.

கோபாலய்யர் இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டாலும் தன் மகன் ஆனந்தய்யர் வீட்டில் விருந்து சாப்பாட்டைச் சாப்பிடுவதால் ஒரு நஷ்டமும் ஏற்பட்டுவிடாது என்று எண்ணி அவர் அனந்தய்யர் சொன்னதற்குச் சம்மதம் தெரிவித்தார்.

கோபாலய்யரின் மகன் ஒரு நாள் விருந்து சாப்பாடு சாப்பிட வந்தான். அனந்தய்யரும் அவனை வரவேற்று உட்கார வைத்து அவனுடன் மத்தியான்னம் ஒரு மணிவரை ஏதேதோ பேசிக் கொண்டே இருந்தார். அதன் பிறகு அவனை அழைத்துக் கொண்டு

—சுதா கிருஷ்ணசாமி—



உள்ளே போய் சாப்பிட உட்கார்ந்தார் விருந்தைச் சாப்பிட்டு முடித்து பின் அவர் கோபாலய்யரின் மகனிடம் ''இதோ பார்! நீ என் மகளை மணக்கத் தகுதி பெற்றவனல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. இதை உன் தந்தையிடம் கூறிவிடு. உங்களுக்கெல்லாம் சிரமம் கொடுத்ததற்காக என்னை மன்னிக்குமாறு நான் வேண்டுவதாகவும் கூறு'' என்று சொல்லி அனுப்பி விட்டார்.

இதைப் போலவே வேறு மூன்று வாலிபர்களையும் அனந்தய்யர் தன் வீட்டில் விருந்து சாப்பிட வைத்து அவர்கள் சாப்பிட்டு முடித்ததும் அவர்கள் தன் மகளை மணக்கத் தகுதி பெற்றவர்களல்ல என்று கூறி அனுப்பி விட்டார்.

இதையெல்லாம் கேள்விப்பட்ட அனந்தய்யரின் ஆருயிர் நண்பரான ராமய்யர் அவரைக் கண்டு ''அனந்து! நீ ஏன் இப்படிச் செய்கிறாய்? மண மகனுக்கு திருமணம் நிச்சயம் செய்யு முன் விருந்தளித்து விட்டுப் பிறகு அவர்கள் உன் மகளை மணக்கத் தகுதி பெற்றவர்களல்ல என்று கூறி அனுப்பி விடுகிறாயாமே. ஏன்?'' என்று கேட்டார்.

அனந்தய்யரும் சிரித்தவாறே ''தக்கதொரு திருமண மகன் கிடைக்கும் வரை இதன் ரகசியத்தை யாருக்கும் கூறமாட்டேனென்று நான் யோகிக்கு வாக்களித்திருக்கிறேன். அதனால் நீயும் பொறுத்துப் பார். எல்லாம் அப்போது புரியும்'' என்றார். ராமய்யரும் சிரித்தவாறே ''அப்படியா? சிவபுரியில் என் தங்கை இருக்கிறாள். அவளது மகன் பாலன் உன் மகளை மணக்கத் தகுதி பெற்றவனென நான் நினைக்கிறேன். அவனுக்கும் திருமணம் நிச்சயமாவதற்கு முன் உன் வீட்டில் விருந்து சாப்பாடு போடப் போகிறாயா?'' என்று கேட்டார்.

அனந்தய்யரும் ''யோகியின் கட்டளை அது. விருந்து சாப்பிட்டு முடித்த பிறகுதான் திருமண நிச்சயமாவது பற்றிக் கூற முடியும். நாளையே நாம் இருவரும் சிவபுரிக்குப் போய் உன் தங்கையின் மகனை என் வீட்டிற்கு வந்து விருந்துண்ண அழைக்கலாம்'' என்றார். மறு நாளே இரு நண்பர்களும் சிவபுரிக்குப் போய் ராமய்யரின் தங்கையிடம் விஷயத்தைக் கூறவே அவளும் தன் மகன் பாலனைத் தன் அண்ணனுடன் அனுப்பி வைத்தாள்.

பாலனுடனும் ராமய்யருடனும்

சேர்ந்து வந்த அனந்தய்யர் தன் நண்பரிடம் ''ராமா! நீ உன் மருமகனை அழைத்துக் கொண்டு என் வீட்டிற்கு நாளை வந்து விடு. நீயும் விருந்தை சாப்பிடலாம்'' என்று கூறிவிட்டு அவர்களை ராமய்யரின் வீட்டில் விட்டு விட்டுத் தன் வீட்டை வந்தடைந்தார்.

மறு நாள் காலை ராமய்யர் பாலனை அழைத்துக் கொண்டு அனந்தய்யரின் வீட்டில் விருந்து சாப்பிடச் சென்றார். அவர்களை வரவேற்று உட்கார வைத்து அனந்தய்யர் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார். மணி பனிரெண்டும் ஆகிவிட்டது. அப்போது ராமய்யர் ''என்னப்பா அனந்து! இன்னும் சாப்பாடு தயாராக வில்லையா? பசிக்கிறதே'' என்று கேட்டார்.

அனந்தய்யரும் ''விருந்து சாப்பாடு தயாரிக்க கொஞ்சம் நேரம் ஆகத் தானே ஆகும்? அதற்குள் உங்கள் இருவருக்கும் ஷர்பத் கொண்டு வரச் சொல்லட்டுமா?'' என்று கேட்டார். உடனே பாலன் ''வேண்டாம். சாப்பிடுவதற்கு முன் எத்தகைய பானத்தையும் நான் குடிப்பதில்லை. வேண்டுமானால் என் மாமாவுக்கு மட்டும் ஷர்பத்தைக் கொடுங்கள்'' என்றான். ராமய்யரும் உடனேயே தனக்கும் ஷர்பத் வேண்டாமென்று கூறி விட்டார்.

அரை மணி நேரமான பின் சாப்பாடு தயார் எனத் தெரிவிக்கப்பட்டது.

மூன்று பெரிய இலைகள் போட்டு மூன்று வகைக் காய்கள் மூன்று வகை கூட்டுகள். பச்சடி, அப்பளம், வடை, ஊறுகாய் என்றெல்லாம் பரிமாறப்பட்டிருந்தன. அவற்றைப் பார்த்ததும் பாலன் ''இதெல்லாம் மிக அதிகமாகப் பரிமாறப்பட்டிருக்கிறதே. ஒவ்வொன்றிலிருந்தும் பாதிக்கும் மேலாக எடுத்து விடுங்கள். எனக்கு எதையும், வீணாக்கப் பிடிக்காது. அளவுக்கு மேலாக நான் சாப்பிடவும் மாட்டேன். வேளை தவறியோ, நினைத்த போதோ எதையாவது சாப்பிட்டுக் கொண்டிக்கும் பழக்கமும் எனக்குக் கிடையாது'' என்றான்.



அப்போது காவேரி வந்து பாலனின் இலையிலிருந்து எல்லா வகைக் கூட்டு, கறிகளிலிருந்து பாதிக்கும் மேலாக எடுத்துத் தட்டில் வைத்து கொண்டு போனாள். அதன் பிறகு தனக்கு வேண்டிய அளவிற்கு மட்டும் எல்லாம் இருப்பது கண்டு திருப்தி அடைந்து பாலன் சாப்பிட்டு விட்டு

எழுந்தான். ராமய்யரும் சாப்பிட்டு விட்டு கையலம்பிக் கொண்டு வரவே அனந்தய்யர் "இருங்கள். இருவருக் கும் போட்டுக் கொள்ள வெற்றிலை பாக்கு கொண்டு வருகிறேன்" என்று கூறி உள்ளே போய் சற்று நேரத்திற் குப் பிறகு தட்டத்தில் அவற்றை வைத்து எடுத்து வந்து அவர்களின் முன் வைத்தார்.

பிறகு அவர் பாலனிடம் "சாப் பாடு எப்படி இருந்தது? ஏதாவது குறைவா?" என்று கேட்டார். பாலன் சற்றுத்தயங்கவே அவரும் "ஓரிரண்டு உனக்கு அவ்வளவாகப் பிடிக்க வில்லை என்பது தெரிகிறதே" என் றார். பாலனும் "கூட்டில் கொஞ்சம் தேங்காயையும் சீரகத்தையும் சேர்த்து அரைத்துவிட்டுக் கொதிக்க வைத்தி ருக்கலாம். சாம்பார் கொஞ்சம் கார மாக இருந்தது. ரசம் இன்னமும் ஒரு கொதி கொதித்திருந்தால் இதை விட நன்றாக இருந்திருக்கும்" என்றான்.

இதைக் கேட்ட அனந்தய்யர் மகிழ்ந்துபோய் "ராமா! இந்த பாலன் தான் என் மகளுக்கு ஏற்றவன் என்று யோகி என் காதில் இப்போதுதான் கூறினார்" என்றார் அதைக் கேட்ட ராமய்யர் "அனந்து! இந்தக் கதையை நானா நம்புவேன்? யோகியின் பெயர் சொல்லி என்னை ஏமாற்ற முடியாது. உண்மை என்ன என்று சொல்லிவிடு" என்று கேட்டார். அனந்தய்யரும் "ராமா! நான் நடத்தி வருவதோ பட் சணக் கடை. அந்தக் கடையில் உட் கார்ந்து வியாபாரம் செய்பவன் நொடிக்கு நொடி எதையாவது எடுத் துச் சாப்பிடுபவனாக இராமல் சரி யான வேளையில் மட்டும் சாப்பிடு பவனாக இருக்க வேண்டும். உணவு பண்டங்களின் ருசியை அறிந்தவனாக இருக்க வேண்டும். இப்படிப்பட்ட வன் இன்று எனக்குக் கிடைத்து விட் டான். பாலனை என் மாப்பிள்ளை யாக ஏற்கச்சம்மதிக்கிறேன்" என்றார்.

ராமய்யரும் "சரி. உன் மகளின் சம்மதம் கிடைக்க வேண்டாமா?" எனவே அனந்தய்யரும் "அவளும் சம்மதித்து விட்டாள். இனி பாலன் சம்மதிக்கிறானா என அறிய வேண் டும்" என்றார்.

பாலனும் "எனக்கும் சம்மதமே" எனவே ராமய்யரும் "இனி முகூர்த்த நாளைக் குறிப்பிட வேண்டியதுதான்" என்றார் சிரித்தவாறே.



ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள்

4

# பாளையக்காரர்களின் புரட்சி

கருத்து: **மீரா உக்ரா** ஓவியம்: **கௌதம் சென்**

பாஞ்சாலங் குரிச்சி பாளையக்காரர் வீர பாண்டிய கட்ட பொம்மன் 1798ல் தூக்கி லிடப்பட்ட போது கம்பெனி அதிகாரிகள் தம் துன்பம் தீர்ந்ததெனப் பெரு மூச்சு விட்டனர்.















பாளையங்கோட்டையில் வீரபாண்டியனின் இரு சகோதரர்களும் உறவினர்களும் கோட்டைக்குள் சிறை வைக்கப்பட்டனர். கிராம வாசிகள் அங்கு சென்றனர்.



சில்லறை வியாபாரிகள் போலே




ஆயுதங்கள் அவற்றில் மறைத்து வைக்கப் பட்டிருந்தன. இருட்டின பிறகு...



திடுக்கிட்ட காவலாளிகள் அடக்கப்பட்டனர், கைதிகள் விரைவில் தப்பி ஓடினர்.



 

பாஞ்சாலங்குரிச்சியின் புதிய பாளையக் காரராக செவத்தய்யா அறிவிக்கப்பட்டான். மக்கள் அவனுக்கு ஆதரவு அளித்தனர்.




சிவகங்கை மருது பாண்டியனும் திண்டுக்கல் கோபால நாயக்கரும். மனக்கார் கேரள வர்மாவும் மற்றும் பலரும் அவர்களுடன் சேர்ந்தார்கள்.







செவத் தய்யாவின் வெற்றிகளைக் கண்டு பயந்து காலின் மெக் காலே திருநெல்வேலியிலிருந்து வந்து பாஞ்சாலங்குரிச்சியைத் தாக்கினான்




ஊமைத்துரையின் வீரர்கள் கடுமையாகத் தாக்கவே மெக்காலே பின் வாங்கினான்.

ஆம். 1801 மார்ச் 31ல் அவன் பின் வாங்கிச் சென்றான். அவனுக்கு வேறு வழி இருக்கவில்லை.



 

சில நாட்களுக்குப் பின் ஜெனரல் அக்நியு கோட்டையைத் தாக்கி மதில் சுவரைத் இடித்தான்.




மருத பாண்டியனும் அவனது தோழர்களும் இராமநாதபுரம், திருபத்தூர் மற்றும் பல இடங்களை பிடித்தனர். ஊமைத்துரை மதுரையைக் கைப்பற்றினான்.



கொரில்லாப் போர் முறையில் ஆங்கிலேயர்களை துன்புறுத்தினான்.

ஆங்கிலேயர் தம் படை பலத்தை அதிகரித்தனர்




பாளையக்காரர்கள் வீரா வேசத்துடன் போர் புரிந்தும் பல இடங்களில் தோற்கடிக்கப்பட்டனர்.




மருது பாண்டியன் அவனது சகோதரன் வெள்ளைப் பாண்டியன், அவர்களுடைய மகன்கள், பேரன்கள் எல்லோரும் பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டனர். கோபால் நாயக்கர், செவத்தய்யா, ஊமைத்துரை மற்றும் பல பாளையக்காரர்கள் பாஞ்சாலங் குரிச்சியில் சிரச் சேதம் செய்யப்பட்டனர்.





# மகாபாரதம்

உத்தரன் கௌரவப் படைகளை வென்று பசுக்களை மீட்பதற்கு உதவியவன் ஒரு தேவ புருஷன் என்று கேட்ட விராட மன்னன் ''அப்படியா விஷயம்? அந்த மகா புருஷரைப் பார்த்து வணங்கி பூஜை செய்ய விரும்புகிறோம்'' என்றான். உத்திரனும் ''அந்த தேவ புருஷர் எனக்கு வெற்றியைக் கொடுத்துவிட்டு அப்போதே போர்க்களத்திலிருந்து மறைந்து விட்டார். நாளையோ அல்லது அதற்கு மறுநாளோ இங்கு அவரே வருவார்'' என்றான். அந்த தேவ புருஷர்தான் அலியாக உள்ள பிரகன்னனை என்பதை விராட மன்னன் அறிந்திருக்கவில்லை!

தன் தந்தையின் அனுமதி பெற்று உத்திரன் தான் போர்க்களத்திலிருந்து எடுத்து வந்த வண்ண வண்ணத் தலைப் பாகைத் துணிகளைத் தன் தங்கை உத்தரையிடம் கொடுத்தான். இதன் பிறகு அவன் தருமரையும் அர்ஜுனனையும் கண்டு பேசி இனி செய்ய வேண்டியதைத் திட்டமிடச் செய்தான்.

இதற்கு இரண்டாவது நாள் காலையில் பாண்டவர்கள் நன்கு குளித்து தூய ஆடைகளை அணிந்து விராடனின் தர்பார் மண்டபத்திற்குள் சென்றார்கள். அவர்கள் அரசர்கள் அமரும் ஆசனங்களில் அமர்ந்தார்கள். சற்று நேரத்தில் விராட மன்னன் தர்பார் மண்டபத்துள் நுழைந்தான். அங்கு தன்னிடம் பணி புரிந்து வருபவர்கள் உயரிய ஆசனங்களில் அமர்ந்திருப்பது கண்டு கோபம் கொண்டான். அவன் கங்கபட்டரிடம் ''அந்தணரே! நான் உம்மை என்னுடன் சதுரங்கம் விளையாடத் தான் நியமித்துக் கொண்டேன். இப்போது என் அரியாசனத்தின் மீதே உட்கார்ந்து விட்டீரே என்ன துணிச்சல்?'' என்று கேட்டான். அப்போது அர்ஜுனன் ''மன்னரே! இந்த மகாபுருஷர் இந்திரனின் ஐராவதத்தின் மீது அமர்ந்து

—உத்தரையின் விவாகம்—



விடும் தகுதியைப் பெற்றவர். அப்படிப்பட்டவருக்கு இந்த ஒரு சிறு ஆசனத்தில் அமரவா தகுதி இல்லை? இவர் தர்மத்தின் மறு அவதாரம் மிகுந்த சக்தி வாய்ந்தவர். ராஜரிஷி யாவார். உலகை மனுவைப் போலக் காப்பவர். இவர் குரு தேசத்தை ஆண்டபோது நாற்படைகளின் பலம் மிக அதிகமாகக் கொண்டிருந்தார். சகுனி, கர்ணன், துரியோதனன் முதலானோர் இவரிடம் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார்கள். இப்படிப்பட்டவரா இந்த அரியாசனத்தில் அமர்ந்திருக்கக்கூடாது?'' என்று கேட்டான்.

இதைக் கேட்ட விராட மன்னன் நடுங்கிய குரலில் ''அப்படியானால் இவர் குந்தி தேவியின் புதல்வர் தரும புத்திரரா? அப்படியானால் இவரது மற்ற சகோதரர்களான பீமன், அர்ஜுனன், நகுலன், சஹதேவன் ஆகிய நால்வரும் எங்கே? இவர்களது மனைவி துரௌபதி எங்கே?'' என்று கேட்டான்.

அப்போது அர்ஜுனன் ''வல்லபன் என்ற பெயரில் தங்கள் சமையல் கூடத்தில் பணிபுரிந்து கொண்டிருப்பவர் தான் பீமன். அவர்தான் கீசகனைக் கொன்ற கந்தர்வ புருஷர். உங்கள் குதிரைகளைப் பாதுகாத்துப் பார்த்துக் கொள்பவர் நகுலன் உங்கள் பசு மாடுகளைப் பார்த்துக் கொள்பவர் சஹதேவர். சைரந்திரி என்ற பெயரில் அந்தப் புரத்தில் பணிப் பெண்ணாக இருப்பவள்தான் துரௌபதி. நான்தான் அர்ஜுனன். உங்கள் நாட்டில் எங்கள் அஞ்ஞாதவாசத்தைச் சுகமாகக் கழிக்க முடிந்தது. இதற்கு உங்களுக்கு மிக்க நன்றி'' என்றான்.

அப்போது உத்திரன் போர்க்களத்தில் அர்ஜுனன் தனக்கு வெற்றி கிடைக்கச் செய்ததைத் தன் தந்தையிடம் விவரமாகக் கூறினான். அர்ஜுனன் எதிரிகளின் மீது சிங்கம் போலப் பாய்ந்து தாக்கியதையும் சங்க நாதம் புரிந்து படைகளைப் போர்க்களத்திலிருந்து விரட்டிய விதத்தையும் உத்திரன் தன் தந்தையிடம் வர்ணித்தான். விராட மன்னனும் ''ஆகா! பாண்டவர்களை நாம் கௌரவிக்க வேண்டும். நாம் நம் உத்திரையை அர்ஜுனனுக்கு மணம் செய்து வைப்போம்'' என்றான்.

பிறகு அவன் ''நான் சுசர்மனிடம் தோற்று நின்றபோது எனக்கு உதவி சுசர்மனைத் தோற்கடித்து என்னைச் சிறை மீட்டவர் பீமனே. பாண்டவர்களின் உதவியால் தான் நாம் இரு

வெற்றிகளையும் பெற்றோம். அவர்களுடைய நட்பும் உறவும் நமக்கு மிகவும் தேவை. நாம் அறியாமல் ஏதேதோ பேசி தருமரின் மனதைப் புண்படுத்தி இருக்கிறோம். அவர் அதையெல்லாம் மன்னித்து விடுவார்'' என்றான்.

விராட மன்னன்தருமரைவணங்கி ''இனி இந்த நாடு, பொக்கிஷம். அரண்மனை, ஆட்சி ஆகியவை எல்லாமே உங்களுடையதே. உங்கள் ஐவருக்கும் நாங்கள் எல்லோரும் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம்'' என்றான்.

தருமர் அர்ஜுனனைப் பார்த்தார் அர்ஜுனனும் விராட மன்னனைப் பார்த்து ''நீங்கள் எங்கள் அஞ்ஞாத வாசம் வெற்றிகரமாக முடிந்ததற்குச் செய்த உதவிக்காக நன்றி'' எனவே விராடன் ''நான்தான் உங்களுக்குக் கடன் பட்டிருக்கிறேன். எனவே என் மகளை உங்களுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்புகிறேன்'' என்றான். அர்ஜுனனும் ''உத்திரை என் சிஷ்யை. நான் அவளது குரு. அவளுக்குத் தந்தை போன்றவன் எனவே அவளை நான் மணப்பது முறையல்ல. அவளை என் மருமகளாக ஏற்கிறேன். என் மகன் அபிமன்யு வீரன். கிருஷ்ணரின் மருமகன். எல்லாவிதத்திலும் உத்திரையின் கணவனாவதற்கு தகுதி பெற்றவன்'' என்றார்.

விராட மன்னனும் இதற்குத் தன் சம்மதத்தையும் மகிழ்ச்சியையும் வெளிப்படுத்தி ''உங்கள் இஷ்டம் போலவே செய்யலாம். உங்களுடன் உறவு கொள்வது மிக முக்கியம்'' என்றான். இதன் பின் திருமணத்தை எப்போது வைத்துக் கொள்வது என்பது பற்றிப் பேசப்பட்டது. விராட மன்னனும் அர்ஜுனனும் இது பற்றி கிருஷ்ணருக்கும் செய்தி அனுப்பினார்கள்.

அஞ்ஞாத வாசம் முடிந்ததும்





விராடனின் அரண்மனை கலகலப்பாக இருந்தது. சங்க நாதம் எப்போதும் கேட்டுக் கொண்டே இருந்தது. பாண்டவர்களின் வசதிகளை விராட மன்னனே நேரடியாகக் கவனித்துக் கொண்டான். உத்திரையை மண மகளது கோலத்தில் அந்தப்புரப் பெண்கள் அலங்கரித்தனர். அத் திருமணத்திற்கு அர்ஜுனன் தர்மரின் சம்மதம் பெற்று கிருஷ்ணர் முன்னிலையில் அபிமன்யுவிற்கும் உத்திரைக்கும் திருமணம் செய்து வைத்தான்.

அபிமன்யுவின் திருமணம் நடைபெற்ற மறுநாள் பாண்டவர்களும் மற்ற விருந்தினர்களும் விராட மன்னனின் அரண்மனைக்குச் சென்றார்கள். விராட மன்னன், துருபதன், மற்றும் பல பிரமுகர்கள் அப்போது அங்கு இருந்தார்கள். அதில் பலராமர், கிருஷ்ணர், வசுதேவர், சாத்தியகி, பிரத்யும்னன், சாம்பன் உபபாண்டவர்கள், அபிமன்யு, விராடனின் புதல்வர்கள் ஆகியோரும் இருந்தார்கள்.

அப்போது கிருஷ்ணர் எல்லோரையும் பார்த்து ''சகுனி ஆடிய மாய சூதாட்டத்தில் இந்த தர்மர் தோற்றுப் போனார். இவரது நாட்டை வஞ்சகமாக துரியோதனன் அபகரித்துக் கொண்டதை நீங்கள் அறிவீர்கள். பலத்தால் வெல்லக் கூடிய சக்தி பெற்றிருந்தும் பாண்டவர்கள் தாம் கொடுத்த வாக்கிற்குக் கட்டுப்பட்டு மிகக்கடுமையான பனிரெண்டு வருட வன வாசத்தை மேற்கொண்டார்கள். அதை விடக் கடுமையான ஒரு வருட அஞ்ஞாத வாசத்தையும் அவர்கள் கழித்து விட்டார்கள். அதுவும் இந்த விராட தேசத்தில்தான். இனிமேல்

பாண்டவர்கள் விராட நாட்டை விட்டு மத்ஸ தேசத்திற்குப் போய் அங்கு உபப்லவம் என்ற நகரில் தங்கினார்கள். அவர்களைக் காண அவர்களது நண்பர்களெல்லாம் வந்தனர். காசி மன்னன் தன் படைகளோடு வந்தான். துருபதன் துரௌபதியின் புத்திரர்களான உப பாண்டவர்களுடனும், சிகண்டியும் திருஷ்டத்யும்னனும் தம் படைகளோடும் வந்தனர். விராட மன்னன் துருபதனை மரியாதைகள் செய்து வரவேற்றான்.

துவாதகையிலிருந்து அபிமன்யுவையும் இந்திரசேனனையும் அழைத்துக் கொண்டு கிருஷ்ணரும் பலராமரும், கிருத வர்மரும், யுயுதானனும், சாத்தியகி, அக்ரூரர் சாம்பன் முதலியவர்களும் ரதங்களில் வந்து விராட நகரை அடைந்தார்கள்.

என்ன நடக்க வேண்டுமென்பதை நீங்கள் யோசித்துக் கூறுங்கள். அது தர்மருக்கும் துரியோதனுக்கும் சம்மத மாகவும் நியாயமானதாகவும் இருக்க வேண்டும் தர்மர் அநியாய முறையில் சொர்க்கத்தின் சிம்மாசனம் கிடைத்தா லும் ஏற்க மறுப்பவர். நியாயமாய் ஒரு சிறு கிராமம் கிடைத்தாலும் அதை ஏற்று ஆட்சி புரிபவர். இவர் எப்போ தும் திருதராஷ்டிரனின் புதல்வர்களின் நன்மையையே நாடுபவர். பாண்ட வர்கள் தம் முயற்சியால் முன்பு வென்ற நாட்டைத்தான் இப்போது கேட்கிறார்கள். இந்த இருதரப்பின ரும் சகோதரர்களே. எனவே இரு தரப்பினர்களின் நலனைக் கருத்தில் கொண்டு உங்கள் யோசனை கூறுங் கள். ஒழுங்காக துரியோதனன் இவர் களது நாட்டை இவர்களுக்குக் கொடுத்து விட்டால் சரி. இல்லாவிட் டால் பாண்டவர்கள் திருதராஷ்டிர னின் புதல்வர்களை ஒட்டு மொத்த மாக ஒழித்து விடுவார்கள். துரியோ தனன் தான் பலம் மிக்கவன் என்றும் பாண்டவர்களுக்கு பலமில்லை என் றும் நினைத்து விட வேண்டாம். துரி யோதனன் இது பற்றி என்ன அப்பிரா யம் கொண்டிருக்கிறான் என்பது நமக்கு தெரியாது. அதை அறிந்த பிறகே நம்மால் எதையும் முடிவு செய்ய முடியும். எனவே அவனது அபிப்பிராயத்தை அறிந்து கொள்ள நாம் ஒரு தூதரை அனுப்ப வேண்டும். அவர் துரியோதனனுக்கு நல்ல வித மாக எடுத்து கூறி பாண்டவர்களுக்கு அவர்களது நாடு கிடைக்கும்படிச் செய்யலாம் அல்லவா?'' என்றார்.

பலராமனும் கிருஷ்ணர் கூறியதை யொட்டி ''இங்கிருந்து செல்லும் தூதர் பீஷ்மரையும், துரோணரையும், திருத ராஷ்டிரனையும், அசுவத்தாமனை யும், கிருபரையும், சகுனியையும், கர்ணனையும் கௌரவர்களையும் கண்டு இன் முகத்துடன் பேசுபவராக





அழைத்து பந்தயம் வைக்கச் சொல்லி நிர்பந்தித்து எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். இதுவா நியாயமான ஆட்டம்? இல்லயே ஆனால் நிபந்தனைப்படி வனவாசம் பனிரெண்டு ஆண்டுகள் செய்து ஒரு வருட அஞ்ஞாதவாசத்தையும் கழித்து விட்டு நியாயமாய்த் தங்களுக்குக் கிடைக்க வேண்டிய நாட்டைத்தானே பாண்டவர்கள் திரும்பக் கேட்கிறார்கள்? அதை மறு பேச்சு பேசாமல் துரியோதனன் கொடுக்கத்தானே வேண்டும்? இதற்கு துரியோதனனிடம் யாராவது போய்க் கெஞ்சவா வேண்டும்? கொடுக்கப் போகிறாயா இல்லையா என்று மிரட்ட வேண்டும். மயிலே மயிலே இறகு போடு என்றால் அது போட்டு விடுமா? நாமே அதனிடமிருந்து பிடுங்கிக் கொள்வது போலத்தான் துரியோதனனிடமிருந்து நாட்டைப் பிடுங்க வேண்டும். அவனிடம் தர்ம நியாயங்களைப் பேசுவதில் எவ்விதப் பயனும் இல்லை. நாமெல்லாம் எதற்கு இருக்கிறோம்? நாம் கொடுக்கிற அடியில் துரியோதனன் கதறிக் கொண்டு தர்மரிடம் அவரது நாட்டை ஒப்படைத்து விடுவான். இதுதான் சரியான வழி இதைச் செய்யலாமா என்று யோசித்துக் கூறுங்கள்'' என்றான்.

துருபத மன்னனும் ''சாத்தியகி கூறுவது மிகவும் சரியே. தர்ம நியாயங்களை எடுத்துச் சொல்வதால் துரியோதனன் தர்மருக்கு அவரது நாட்டைத் திருப்பிக் கொடுத்துவிடமாட்டான். திருதராஷ்டிரனிடம் ''உன் மகனுக்கு ஆட்சி புரியும் சக்தி கிடையாது. பீஷ்மரும் துரோணரும் துரியோதனன்

இருக்க வேண்டும். அவர்களுக்குக் கோபம் வரும்படிப் பேசக் கூடாது. உண்மையில் தர்மர் சகுனியுடன் சூதாட்டம் ஆடியது தவறே. சகுனி ஆட்டத்தில் பகடைக்காய்களை உருட்டிப் போடுவதில் கை தேர்ந்தவன். தர்மர் வேறு யாருடனாவது சதுரங்கம் ஆடி இருந்தால் கண்டிப்பாக வெற்றி பெற்றே இருப்பார். ஆனால் இனி அது பற்றிப் பேசுவானேன்? துரியோதனனிடம் போய்ப் பேசுபவர் ஆத்திரப் படாமல் நம் வேலையைச் செய்து முடிப்பவராக இருக்க வேண்டும்'' என்றார்.

பலராமன் இவ்வாறு கூறியதும் சாத்தியகி ஆத்திரம் கொண்டு ''இந்த மாதிரி வழவழாவென்ற பேச்சால் ஒரு பயனும் இல்லை. சூதாட்டத்தில் தேர்ந்திராத தர்மரை அவர்கள் சூதாட

சொல்கிறபடி நடக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். கர்ணனும் சகுனியும் கண்மூடித்தனமாக துரியோதனனை ஆதரித்துக் கொண்டிருக்கிறார்கள். நாம் அனுப்பும் தர்ம நியாயங்களை மட்டும் எடுத்துக் கூறுபவராக இருக்கக் கூடாது. நம் பலத்தை எடுத்துக் காட்டுபவராக இருக்க வேண்டும். இப்போதே சல்லியன், திருஷ்ட கேது, ஜெயசேனன், கேகேயன் முதலிய மன்னர்களைத் தம் படைகளோடு வரச் சொல்லும்படிக் கூறுங்கள். மற்றும் நமக்குத் துணையாக நிற்கும் மன்னர்களையும் தம் படைகளோடு வந்து சேரும்படி செய்தி அனுப்ப வேண்டும். துரியோதனனும் தனக்கு வேண்டிய மன்னர்களுக்கு இவ்வாறு வேண்டுகோள் விடுப்பான். முதலில் நாம் அவர்களை அணுகுவதால் நமக்கே அவர்கள் உதவுவார்கள் இவ்வாறு முன் கூட்டியே நாம் படைகளைத் திரட்டி வைத்துக் கொண்டு விட வேண்டும். துரியோதனனிடம் பேசுவது சிக்கலான விஷயம். அது பற்றிப் பேச சமர்த்தர் என் புரோகிதர் என எண்ணுகிறேன். எனவே முதலில் அவரை அனுப்பி துரியோதனன் என்ன நினைக்கிறான் என்று தெரிந்து கொள்வோம்'' என்றான்.

கிருஷ்ணரும் ''துருபதன் சொல்வது போல் செய்வதில் தான் பாண்டவர்களுக்கு நன்மை இருக்கிறது. நம் செயலில் ராஜ நீதி இருக்க வேண்டும். இப்போது நாம் எல்லோரும் உத்திரையின் திருமணத்திற்கு வந்தோம். அது நன்கு நடைபெற்றது. நாம் எல்லோரும் அவரவர் இடங்களுக்கு மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்வோம். துருபதன் நம் எல்லோரிலும் வயதானவன். நமக்கு குருவிற்குச் சமமானவன். திருதராஷ்டிரனுக்குச் சொல்ல வேண்டியதை அவனே சொல்லி அனுப்பினால் பீஷ்மரும் துரோணரும் அதைக் கவனமாகக் கேட்பார்கள். ஒரு வேளை துரியோதனன் அதையெல்லாம் லட்சியம் செய்யாவிட்டால் எல்லா மன்னர்களுக்கும் செய்தி அனுப்புவது போல எனக்கும் அனுப்புங்கள்'' என்றார்.

இவ்வாறு கூறிக் கிருஷ்ணர் கிளம்பவே, விராட மன்னன் அவருக்குத் தக்க மரியாதைகள் செய்து அனுப்பி வைத்தான்.



# அம்புலிமாமா செய்திகள்

**புது விதப் பொழுது போக்கு!**

சாதாரணமாக நம் நாட்டு அயல் நாட்டுத் தபால்தலைகள் சேகரித்தல், பல வித நாணயங்கள், அழகிய படக் கார்டுகள், அழகிய வண்ணச் சாக்லெட் உறைகள் போன்றவற்றைச்



சேகரிப்பது பல சிறுவர்களுக்குப் பொழுது போக்கு. ஆனால் கேரளத்தில் நீலாம்பூரைச் சேர்ந்த ஷமீர், ஷஹுர் என்ற இரு சகோதரர்கள் பொழுதுபோக்காய் சேகரித்து வந்தது பறவைகளின் இறகுகளை, நீலாம்பூரகே காடுகள் அதிகம். இச்சகோதரர்கள் ஒருநாள் ஒரு காட்டில் திரிந்து கொண்டிருக்கையில் ஒரு பறவையின் இரண்டடி நீள இறகு ஒன்றைக் கண்டு எடுத்தார்கள். அதை அவர்கள் வீட்டிற்குக் கொண்டு வந்து பத்திரப் படுத்தி வைத்தார்கள். அது முதல் காடுகளிலுள்ள மயில், மைனா, கிளி, குருவி, மரங் கொத்தி போன்ற சுமார் 200 பறவைகளின் நீளமான இறகுகளை இவர்கள் சேகரிக்கலானார்கள். அவர்களது பெற்றோர்களும், ஆசிரியர்களும் அச்சகோதரர்களுக்கு இவ்வாறு இறகுகளைச் சேகரிக்க ஊக்கமளித்தார்கள். அச்சகோதரர்கள் தாம் கண்ட பறவைகளை பற்றிப் பல விவரங்களைக் குறிப்பெடுத்து எழுதி வைத்துள்ளார்கள்.

**தங்கத்திற்கான மோகம்!**

நம் நாட்டில் 4,93,000 கோடி ரூபாய் மதிப்புள்ள 9,500 டன் தங்கம் நகைகளில் முடங்கிக் கிடக்கிறது. இவையாவும் வசதியான குடும்பங்களில் உள்ளன. நம் நாட்டிலுள்ள தங்கம் உலகிலுள்ள தங்கத்தில் 8 சத விதமாகும். ஆண்டு தோறும் 500 டன் தங்கம் நம் நாட்டில் பல குடும்பங்களில் சேகரிக்கப்படுகிறது என்று கணக்கிடப்பட்டுள்ளது. இதில் நம் நாட்டிலிருந்து கிடைக்கும் தங்கம் 2 டன்களே. மீதத் தங்கம் அயல் நாடுகளிலிருந்து நம் நாட்டிற்குக் கொண்டு வரப்படுகிறது.

**ஏலத்தில் எலும்புக் கூடு!**

பூமியில் சுமார் 65,000,000 வருடங்களுக்கு முன் வாழ்ந்ததாகக் கருதப்படும் ஒரு ராட்சஸப் பல்லியின் (டினாசோர்) எலும்புக் கூட்டை அமெரிக்காவில் தெண்ட கோடாவில் 1990ல் ஹீட்ரீகிசன் என்பவர் கண்டு எடுத்தார். ஐம்பதடி நீளமுள்ள இந்த எலும்புத் கூட்டின் பெயர் சூயா. இதனை 130 பெட்டிகளில் அண்மையில் நியூயார்க்கிற்குக் கொண்டு வந்தார்கள். இதுவரைக் கண்டு பிடிக்கப்பட்ட ராட்சஸப் பல்லிகளின் எலும்புக் கூடுகளில் 40 முதல் 50 சதவீத எலும்புகளே இருந்தன. ஆனால் சூயாவின் எலும்புகள் அனைத்தும் அப்படியே உள்ளன. அண்மையில் நியூயார்க்கில் நடந்த ஏலத்தில் சிகாகோ அருங்காட்சியகச் சொந்தக்காரர் ஒருவர் இந்த எலும்புக் கூட்டை 5,400,000 டாலர்களுக்கு (அதாவது 30 கோடி ரூபாய்கள்) எடுத்துள்ளார்.

அம்புலிமாமா அனுபந்தம் 110




# சுற்றுலாப் பயணிகளைக் கவரும் கொச்சி





பசுமையான வயல்களும் மலைகளும் நிறைந்த கேரள மாநிலத்தில் கொச்சி வரலாற்றுப் புகழ் பெற்ற நகரம். வரலாற்றிலும் பண்பாட்டிலும் கலைகளிலும் இது உயர்ந்து விளங்குகிறது. இங்கிருந்து பல நூற்றாண்டுகளாக வாசனைத் திரவியங்கள், தேயிலை, காப்பிக் கொட்டை முதலியன அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன 16வது நூற்றாண்டில் கொச்சியை முதலில் போர்த்துக் கீசியர்கள் கைப்பற்றினார்கள். அதன்பின் இது டச்சுக்காரர்கள் வசமாகியது. துறைமுகத் தருகேயுள்ள மட்டஞ்சேரியிலுள்ள டச்சு அரண்மனையை உண்மையில் 1557ல் போர்த்துக் கீசியர்கள்தாம் கட்டினார்கள். ஆனால் 1663ல் டச்சுக்காரர்கள் அதைப் புதுப்பித்துக் கட்டியதால் அதற்கு இப்பெயர் வந்து விட்டது!

காமன்வெல்த் நாடுகளிலேயே யூதர்களின் பழமையான பிரார்த்தனை மந்திரம் (சினோகாக்) இங்கு உள்ளது. இதை 1568ல் கட்டினார்கள். கி.பி. முதலாவது நூற்றாண்டில் ரோமனியரின் தொல்லைகளுக்கு பயந்து யூதர்கள் அகதிகளாகக் கேரளத்திற்கு வந்தார்கள்.

கொச்சியில் மட்டுமே இன்னமும் மீன் படிக்க சீன மோஸ்தர் வலைகள் பயன்படுத்தப் படுகின்றன. கொச்சியைச் சுற்றிப் பல தீவுகள் உள்ளன. இவற்றிற்குச் செல்லப் படகுகள் உள்ளன. வெல்லிங்க்டன் தீவினருகே டால்ஃபின்கள் துள்ளி விளையாடுவதைக் காணலாம். கொச்சியில் ரயில், விமானப் போக்குவரத்து இருந்தாலும் தென்னை மரங்கள் இருபுறமும் வளர்ந்த கால்வாய்களில் படகுகளில் இயற்கைக் காட்சிகளை ரசித்தவாறே கொச்சி க்ருப் பயணம் போவதும் மறக்க முடியாத மகிழ்வூட்டும் நிகழ்ச்சியாகும்.

# ஏகவீரன்

ஒருமுறை புனித கங்கை நதிக் கரையில் பல சிறிய நாடுகள் இருந்தன. அந்நாடுகளில் ஒன்றின் மன்னன்தான் ஹைஹய வம்சத்தைச் சேர்ந்த ஏகவீரன். ஒருநாள் காட்டில் அவன் சஞ்சாரம் செய்யும் போது தென் திசையிலிருந்து நறுமணம் வீசியது. அது எங்கிருந்து வருகிறது எனப் பார்க்க அவன் சென்றான். கொஞ்ச தூரம் போனதும் ஒரு அழகிய குளத்தை அவன் கண்டான். அக்குளத்தின் நடுவே மிகப் பெரிய தாமரை மலர் ஒன்று இருந்தது.

அந்தக் குளத்தின் கரையில் பெண் ஒருத்தி நின்று அழுது கொண்டிருந்தாள். அவள் அண்டை நாட்டு ரைப்ய மன்னனின் மகளான ஏகாவளியின் தோழி. ஏகாவளிக்குத் தாமரை மலர் என்றாலே உயிர். அவளுக்காக ரைப்ய மன்னன் பல குளங்களை வெட்டி அவற்றில் தாமரைக் கொடிகளை வளர்த்து வர ஏற்பாடு செய்திருந்தான். அவற்றில் ஒரு குளத்தில் பெரியதாமரை மலர் இருப்பது கேட்டு அரசகுமாரி தன் தோழியுடன் அக்குளக்கரைக்கு வந்தாள். அப்போது அங்கு வந்த காலகேது என்ற ராட்சஸன் அரசகுமாரியின் அழகைக் கண்டு அவளைத் தூக்கிக் கொண்டு போய் பாதாள லோக குகை ஒன்றில் அடைத்து வைத்தான். அதனால்தான் அரசகுமாரியின் தோழி அழுது கொண்டு நின்று கொண்டிருந்தாள்.

இந்த விவரங்களைக் கேட்டறிந்த ஏக வீரன் பாதாள குகைக்குப் போய் காலகேதுவைக் கொன்று அரசகுமாரியை மீட்டு வந்து அவளது தந்தையிடம் ஒப்படைத்தான். அப்போது ரைப்ய மன்னன் ஏகவீரனிடம் ''நான் என் மகளை உங்களுக்கே விவாகம் செய்து வைக்க எண்ணி உங்களுக்கு ஆள் அனுப்ப எண்ணி இருந்தேன். அதற்குள் இப்படி நிகழ்ந்து விட்டது. ஆனால் நீங்கள் என் மகளை மீட்டு வந்திருக்கிறீர்கள். அவளை மணக்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்'' என வேண்டினான்.

ஏகவீரனும் மகிழ்ச்சியுடன் சம்மதித்து ஏகாவளியை மணந்து கொண்டான்.



## உங்களுக்கு தெரியுமா?

### ராஜரீகச் சின்னங்கள்



©1995 UBC Feature World. All rights reserved

மத்திய நூற்றாண்டுகளில் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தம் கேடயங்களில் அழகிய சின்னங்களைப் பொறித்து வைத்துக்கொண்டார்கள். இவற்றை 'ஹெரால்டிக் டிவைசஸ்' என்பர். இது பற்றி ஆராய்ச்சி புரியும் துறையை ஹெரால்ட்ரி எனக் கூறுவர். இச்சின்னங்கள் அலங்காரமாக இருக்க மட்டுமல்ல. கி.பி. 1140ல் வீரர்கள் இவற்றை அணியலானார்கள். அதிலிருந்து இந்த வழக்கம் வம்ச பரம் பரையாக வரலாயிற்று. சிலர் இவற்றைக் கேடயங்களோடு தலைப் பாகைகளிலும் கவசங்களிலும், குதிரைக் கடிவாளங்களிலும் பொறித்து வைத்துக் கொண்டனர். அக்காலத்தில் தற்போதுள்ளது போல சீருடைகள் கிடையாது. அதனால் போரில் தம் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் யார், எதிரிகள் யார் என்று கண்டு கொள்ள இந்தச் சின்னங்கள் பெரிதும் உதவின.

## வானவில்

### கார்ல் லூயி

விளையாட்டு வீரர்கள் நிறைந்த குடும்பத்தில் பிறந்தவர் மாபெரும் விளையாட்டு வீரர் கார்ல் லூயி. இவரது தந்தை தேகப் பயிற்சி ஆசிரியர். தாயும், சகோதரியும் உலகப் புகழ் பெற்ற விளையாட்டு வீராங்கனைகள். சகோதரர் போகர் ஆட்டக்காரர். கார்ல்லூயி விளையாட்டு ரங்கத்தின் பல அரிய வெற்றிகள் பெற்றவர். 1983ல் யு.எஸ். சாமியன் ஷிப்பில் மூன்று வெற்றிகளைப் பெற்றார். 1984ல் ஒலிம்பிக் பந்தயங்களில் 100 மீ, 200 மீ, ஒட்டப் பந்தயங்களிலும், நீள் தாண்டுதலிலும், 4X100 மீ, ரிலே பந்தயத்திலும் நான்கு தங்கப் பதக்கங்கள் வென்று ஜெஸ்ஸி ஒவன்ஸிற்குச் சமமானனார். 1988 கியோஸ் ஒலிம்பிக் பந்தயங்களில் 100 மீ, ஓட்டம், நீள் தாண்டுதலில் தங்கப் பதுக்கங்களைத் தக்க வைத்துக் கொண்டார். லூயி நீள் தாண்டுதல் பந்தயங்களில் அதிகமான வெற்றிகளை அடைந்த தோடல்லாமல் உலக அளவில் கொஞ்ச தூரத்தை மிக வேகமாக ஓடி 'ஸ்பரின்டர்' என்ற பெயரையும் அடைந்தார்.



சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்



(எங்கிருந்தோ வந்து வியாபாரம் செய்ய வந்த ஆங்கிலேயர்கள் இங்கு சமஸ்தானங்களைக் கைப்பற்றிக் கொள்ளவே பாரத மக்கள் அவர்களுக்கு தாம் என்ன செய்ய வேண்டும் என்றோ என்ன செய்யக் கூடாதென்றோ முடிவு செய்யும் அதிகாரம் கிடையாது எனக் கூறலாயினர். முதலில் மீரட்டில் சிப்பாய்கள் கலகம் புரிந்தார்கள். பிறகு அவர்கள் டில்லிக்குப் போய் ஆங்கில அதிகாரிகளை அடக்கினார்கள். நானா சாகப் தலைமையில் கான்பூரில் சிப்பாய்கள் கலகம் புரிந்து அங்குள்ள ஆங்கிலேயரின் கோட்டையைக் கைப்பற்றினார்கள். இறந்தவர்கள் போக மீதமிருந்த ஆங்கிலேயர்களை அலகாபாதிற்கு பத்திரமாக அனுப்பினார்கள். அதன் பிறகு-)

காலை வேலை எங்கும் அமைதி நிலவியது. ஜான்ஸி அரண்மனையின் அருகிலுள்ள பரந்த மைதானத்தில் ஒரு இளைஞன் குதிரை மீதேறி சவாரி செய்யக் கற்றுக் கொண்டிருந்தான். அந்த இளைஞனை விட வயதில் சற்றுப் பெரியவனான மற்றொரு இளைஞன் அக்குதிரையைப் பிடித்துக் கொண்டு ஓடியவாறே முதலாவது இளைஞனுக்கு உதவி புரிந்து கொண்டிருந்தான். சற்று தூரத்தில் நின்று கொண்டிருந்த சமஸ்தான அதிகாரிகள் அவர்களுக்கு உற்சாக மூட்டும் விதமாய் கோஷங்கள் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவ்வழியே சென்று கொண்டிருந்த மக்களும் அங்கு நின்று அந்தக் காட்சியைக் கண்டு களித்துக் கொண்டிருந்தார்கள். குதிரை மீது அமர்ந்து சவாரி செய்யும் இளைஞன் யாரென்று

அவர்கள் உன்னிப்பாக கவனித்தார்கள். அந்த இளைஞன் வேறு யாருமல்ல, ஆண் வேடம் அணிந்து குதிரை சவாரி பழகும் தங்கள் ராணி லட்சுமி பாய் எனக் கண்டு மகிழ்ந்து போனார்கள். ஜான்சி ராணிக்குக் குதிரை சவாரி கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்த இளைஞன் ஜகன்நாத புரியிலிருந்து வந்த சந்தன் ஹ¯ஜ¯ரி என்பவன்தான். அவன் லட்சுமி பாயின் உடன் பிறவா சகோதரனாக இருந்து வந்தவன்.

குதிரை சவாரி மட்டுமல்லாமல் அதன் மீதிருந்து வாட் போர் புரியவும் லட்சுமி பாய் பயிற்சி அடைந்து கொண்டிருந்தாள். ஒருகையில் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு மறு கையில் வாளை வைத்துச்சுழற்றுவதை மக்கள் கண்டு மகிழ்ந்தனர். எதிரிகளை வெல்ல தம் ராணி போர்க் கலைப் பயில்வது கண்டு உற்சாகத்துடன் மக்கள் ''ஜான்ஸி ராணி வாழ்க'' என கோஷங்கள் எழுப்பினார்கள்.

லட்சுமி பாயோ ''ஜான்ஸி வாழ்க! நான் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி, ஜான்ஸியின் புகழ் ஓங்கி இருக்க வேண்டும்'' என்று கூறியவாறே மக்களை அணுகினாள். அவர்களும் ''தாயே! நம் எதிரிகள் எவ்வளவு சக்தி வாய்ந்தவர்களென்றும், கொடூரமானவர்கள் என்றும் எங்களுக்குத் தெரியும். உங்களையும் நம் நாட்டையும் காக்க எங்கள் கடைசி சொட்டு ரத்தம் வரை சிந்தத் தயாராக இருக்கிறோம்'' என்று பதிலளித்தார்கள்.

லட்சுமிபாயும் ''என் மக்களின் வீர தீர சாகசங்கள் பற்றி நான் அறியாதவளா? நீங்கள் காட்டும் அன்பிற்கு நன்றி. கடவுள் நம் எல்லோரையும்



காப்பாராக'' எனக் கூறி தன் கையை உயர்த்தி அசைத்தாள். அதன்பின் தன் குதிரையை ஓட்டிக் கொண்டு அரண்மனைக்குச் சென்றாள்.

ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத்தேழாவது ஆண்டு ஜ¯ன் மாத ஆரம்பத்தில் ஒருநாள் அரண்மனையில் மந்திரிகளும் படைத் தலைவர்களும் பிரமுகர்களும் கூடினார்கள். லட்சுமி பாய் அவர்களைப் பார்த்து ''கான்பூரில் போர் நடந்து கொண்டிருக்கிறது. என் சிறு வயது நண்பர் நானா சாகப் அங்கிருந்து ஆங்கிலேயர்களை விரட்டிக் கொண்டிருக்கிறார். கம்பெனி வீரர்கள் கோட்டையிலிருந்து போராடிக் கொண்டிருக்கிறார்கள். எந்த நிமிடமும் ஆங்கிலப் படை தோற்றுப் போகலாம். அவர்கள் தம் உயிரைக் காத்துக் கொள்ள எங்காவது ஓடிப்



போயாக வேண்டும். இதுதான் நாமும் சுதந்திரப் பிரகடனம் செய்ய ஏற்ற சமயம். இது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

ஒரு பிரமுகரும் ''ராணியாரே! நீங்கள் சொல்வது சரியே. சுதந்திரப் பிரகடனம் இப்போதே செய்து விடலாம். இங்குள்ள ஆங்கில வீரர்கள் தலை கால் தெரியாது துள்ளி குடித்துக் கும்மாளம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை இப்போது தாக்கினால் ஓடி விடுவார்கள்'' என்றார்.

அது கேட்டு ராணி புன்னகை புரிந்து முதலமைச்சர் லக்ஷ்மண் ராவிடம் ''பிரிட்டிஷ் ராஜப் பிரதிநிதி மேஜர் எல்லிஸ், படைத் தலைவர் மேஜர் மாரோன் ஆகியோர் முன்னிலையில் என் கணவர் சுவீகாரம் எடுத்துக் கொண்டதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். அந்த பாலகனை ராஜ குமாரனாயும் வாரிசாயும் அவர்கள் அங்கீகரித்து அக் குழந்தையின் பாது காவலராக என்னை ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் இப்போது பேராசை கொண்ட கவர்னர் ஜெனரல் டெல்ஹௌசி சுவீகாரம் செல்லாது எனக் கூறி நாடு தனது என்கிறான். நாம் நம் சுதந்திரத்தை இழக்கக்கூடாது. அதைக் காக்க வேண்டும். எனவே அமைதியான முறையில் அவர்கள் இங்கிருந்து வெளியேற வேண்டுமென்று அவர்களிடம் கூறி விடுவோம்'' என்றாள்.

அப்போது முதலமைச்சர் ''ராணியாரே, மூன்று வருடங்களுக்கு முன் பிரிட்டிஷ் அதிகாரி எழுதிய கடிதம் இதோ உள்ளது. அதில் அரச குமாரனின் பிரதிநிதியாகக் நீங்கள் நாட்டை நன்கு நிர்வகித்து வருவதாக எழுதியுள்ளார். அப்படி எழுதியவர்கள் இப்போது வார்த்தை மாறுவது பச்சைத் துரோகம். நாடு தங்களது என அவர்கள் கூறிக் கொள்வது பகல் கொள்ளை'' என்றார்.

ராணியும் ''அவர்களது இந்த அடாத செயலுக்குத் தக்க பலனை அனுபவித்தே தீர்வார்கள். இதை அவர்களுக்குத் தெளிவாகக் கூற நம் பிரதிநிதி ஒருவரை அவர்களிடம் அனுப்புங்கள். அதன் பின் நடக்க வேண்டியதை நாம் கவனிப்போம்'' என்றாள். அவரும் அவ்வாறே செய்வதாகக் கூறவே சபை கலைந்தது.

முதலமைச்சர் ஒரு கடிதம் எழுதி ஒரு தூதுவர் வாயிலாக பிரிட்டிஷ் பிரதிநிதிக்கு அனுப்பினார். அதில் ''ஜான்ஸி சுதந்திர நாடு. இது உங்களது நாடு என்ற பிரமையில் இருக்க வேண்

டாம். இங்கு நீங்கள் எங்கள் விருந்தினராகவோ அல்லது நண்பர்களாகவோ இல்லை. மேலும் எம் மக்களை நீங்கள் துன்புறுத்துகிறீர்கள். இதை நிறுத்தி நீங்கள் எங்கள் நாட்டை விட்டு வெளியேறி விட வேண்டும். இதைச் செய்யா விட்டால் இதன் பலனை நீங்கள் அனுபவிக்க வேண்டி வரும். எங்கள் மக்களை அடித்துத் துன்புறுத்தி பயமுறுத்தி அடிமைகளாக்கிக் கொண்டு போகும் உங்களை இலேசில் விடமாட்டோம். எனவே நீங்கள் இங்கிருந்து மரியாதையாக வெளியேறி விடுங்கள். இது உங்களுக்கு விடும் எச்சரிக்கை'' என்று எழுதி இருந்தது.

இதைப் படித்த, ஜான்ஸியிலுள்ள ஆங்கில அதிகாரிகள் ஆச்சரியப் பட்டனர். ஆயினும் ராணுவப் பயிற்சி பெற்ற தம் வீரர்களை சற்றும் பயிற்சி பெறாத இந்திய மக்களால் என்ன செய்து விட முடியும் என்று இறுமார்ந்திருந்தார்கள். மேலும் கம்பெனி ஜான்ஸியைத் தனது என்று பிரகடனப் படுத்திய போதே ஜான்ஸியின் படைகளைக் கலைத்து விட்டதல்லவா? இந்த வீண் மிரட்டலை ஏன் பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அலட்சியமாக இருந்தனர்.

ஆனால் ஜான்ஸி ராணியின் கட்டளைப் படி முன்னாள் படைத் தலைவர்களின் தலைமையில் மக்கள் ஜான்ஸியில் ஆங்கிலேயர்கள் இருந்த கோட்டையைத் தாக்கினார்கள். காலா கான், மகம்மது ஹுசைன் என்ற ஜான்ஸியின் முன் நாள் படைத் தலைவர்கள் ஜான்ஸி மக்களுக்கு இராணுவப் பயிற்சி அளித்திருந்தனர். பயிற்சி பெற்றவர்கள் தம் கோட்டையைத் தாக்கிக் கொண்டிருப்பது கண்டு ஆங்கிலேயர்கள் பிரமித்துப் போனார்கள்.



''இவர்களுடைய நீல் தானே அரக்கன் போல நம் வீடுகளையெல்லாம் கொள்ளை அடித்து எரித்து நாசமாக்கியவன்? விடாதே இவர்களை'' என்று கூறியவாறே சிலர் அங்கிருந்து ஆங்கிலேயர்களின் மீது பாய்ந்தார்கள். வேறு சிலரோ ''இவர்கள் தாம் நம் சகோதரர்களைக் கொன்றவர்கள். பிடித்துக் கொல் இவர்களை'' என்று கத்தினார்கள். கொஞ்ச நேரத்தில் எண்பதிற்கும் மேற்பட்ட ஆங்கிலேயர்கள் கொல்லப்பட்டார்கள். அந்த ஆங்கிலேயர்களின் கோட்டை மீது ஜான்ஸியின் கொடி பறந்தது.

ஜான்ஸியின் வெற்றி மற்ற சமஸ்தான மன்னர்களுக்கு உற்சாகத்தை

அளித்தது. ஜான்ஸியில் நடந்த புரட்சி பற்றி ஜுன் எட்டாந் தேதி சாகருக்குச் செய்தி கிடைத்தது. இத்துடன் லலித் பூரின் மன்னனும் படைகளைத் திரட்டிக் கொண்டிருக்கிறான் என்று தகவல் வந்தது. ஷாமத் மன்னனும் ஆங்கிலேயர்களை எதிர்க்கத் தயாராகிக் கொண்டிருக்கிறான் என்பதும் தெரிந்தது. சில நாட்களில் நர்மதை நதிக்கு வடக்கேயுள்ள எல்லா சமஸ்தானங்களிலும் புரட்சி அலை அடிக்கலாயிற்று. பான்சூர் மன்னன் லலித்பூரைக் கைப்பற்றி அங்கிருந்த ஆங்கிலேயர்களையெல்லாம் கொன்று விட்டான். லலித்பூரை விடுவிக்க சாகரிலிருந்து கிளம்பிய ஆங்கிலப் படை மேஜர் கானன் தலைமையில் சென்றது. ஆனால் கடும் எதிர்ப்பின் காரணமாக அப்படை மால்போனைக் கடந்து செல்ல முடியவில்லை. மன்னனின் படைகளும் கானனின் படைகளும் மோதின.

அச்சமயம் பான்சூர் மன்னன் கைதான ஆங்கிலேயர்களை சாகருக்குச் செல்ல அனுமதித்தான். ஆனால் அவர்களை ஷாமிட் மன்னன் நடு வழியில் மடக்கிச் சிறைப் பிடித்து விட்டான். மூன்று மாதங்களுக்குப் பிறகே அவர்களை சாகருக்குப் போக அனுமதித்தான். இவ்வளவுக்கும் கைதாகி இருந்த அந்த ஆங்கிலேயர்கள் யாருமே துன்புறுத்தப் பட வில்லை!

இவ்விதமாக இந்தியா முழுவதும் ஆங்கிலேயரை எதிர்க்க வேண்டுமென்ற வெறி தலை தூக்கியது. இதற்குக் காரணம் ஆங்கிலேயர்கள் இந்தியர்களிடம் நடந்து கொண்ட விதமே ஆரம்பத்தில் வியாபாரம் செய்வதற்கான அனுமதியைப் பெற இந்திய மன்னர்களிடம் கெஞ்சிக் கூத்தாடிய இந்த அயல் நாட்டு வியாபாரிகள் படைகளை அமைத்துக் கொண்டு தம் நாடுகளையே அபகரிக்க முயல்வது கண்டு சிறு சமஸ்தான மன்னர்கள் சீறி எழுந்தார்கள்.

இது போதாது என்று ஆங்கில கவர்னர் ஜெனரலான டெல்ஹௌசி கொண்டு வந்த வாரிசு இல்லாத சமஸ்தானம் ஆங்கிலேயருக்கே சொந்தம் என்ற சட்டம் மன்னர்களின் ஆத்திரத்தைக் கிளப்பி விட்டது எனவே கம்பெனி வரி வசூல் கெடுபிடி நாடாளும் ஆசை ஆகியவை இந்தியர்களைக் கலகம் செய்யத் தூண்டின.

**(தொடரும்)**






# ஐயோ! கல்யாணமா?

வெகு காலத்திற்கு முன் காஷ்மீர நகரம் ஒன்றின் பக்கத்தில் இருந்த ஒரு குன்றின் மீது ஒரு ராட்சஸன் ஒரு பெரிய வீட்டைக் கட்டிக் கொண்டு இருந்தான்.

இந்தக் காஷ்மீர ராட்சஸன் மக்களை மிரட்டி அடித்துக் கொன்று நிறையப் பணத்தையும் நகைகளையும் பண்டங்களையும் ஏராளமாகச் சேர்த்துவிட்டான். இதனாலெல்லாம் கூட மக்கள் அந்த ராட்சஸனிடம் அவ்வளவாக பயந்து விடவில்லை ஆனால் சில சமயங்களில் நகருக்குள் போய் யாராவது ஒருவனிடம் போய் அவனது மகளைத் தனக்கு திருமணம் செய்து கொடுக்க வேண்டுமென்று துன்புறுத்தி மணம் செய்து கொண்டு போன போதுதான் பெண்ணின் பெற்றோர் கதறி அழுவார்கள். ஏனெனில் சில நாட்களுக்குப் பின் அந்தப் பெண்ணை ராட்சஸன் கொன்று தின்று விடுவான்.

இவ்வாறு ராட்சஸன் இரு பத்து நான்கு பெண்களை மணந்து கொண்டு அவர்களையெல்லாம் கொன்று தின்று விட்டான்.

அவன் இருபத்தைந்தாவது தடவையாக ஒரு பெண்ணை மணக்கும் நோக்கத்தோடு தன் மாளிகையிலிருந்து இறங்கி நகரை நோக்கிச் சென்றான். நகர எல்லையில் ஒரு குடியானவனை அவன் கண்டு ''நீ உன் மகளை எனக்குத் திருமணம் செய்து வை'' என்று கூறினான். அது கேட்டுக் குடியானவன் திகைத்துப் போனான்.

ராட்சஸனும் ''நான் நாளை மறு நாள் உன் வீட்டிற்குச் சாப்பிட வருகிறேன் அப்போது திருமணம் பற்றிப் பேசி முடிவு செய்யலாம்'' என்று கூறி விட்டுத் திரும்பித் தன் வீட்டிற்குச் சென்று விட்டான். குடியானவன் வீட்டிற்குப் போய் தன் மகளான மாலதியிடம் ராட்சஸன் கூறியதைச்

—சங்கர சுவாமிநாதன்—




வாங்கி வந்தாள். அவற்றை சுவர் ஓரமாக தொங்க விட்டாள். ராட்சஸன் சாப்பிட வருவதாகக் குறிப்பிட்ட நாளில் ஒரு அண்டா நிறைய முயல் மாமிசத்தைப் பக்குவமாகச் சமைத்து வைத்தாள்.

ராட்சஸன் சாப்பிட உட்காரப் போகும் இடத்தில் ஒரு பக்கம் மாமிச அண்டாவையும் இன்னொரு பக்கம் மது நிரம்பிய பீப்பாயையும் மாலதி வைத்தாள். ராட்சஸன் வந்தான். சாப்பிட உட்கார்ந்தான். முயல் மாமிசத்தை எடுத்து வாயில் போட்டவாறே ''ஆகா! வெகு ருசியாக இருக்கிறதே'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினான். பிறகு அவன் ''எனக்காக நிறைய செலவு செய்து இதைத் தயாரித்திருப்பது தெரிகிறது'' எனக் கூறி முயல் மாமிசத்தை எடுத்து எடுத்து விழுங்கலானான்.

சொன்னான். அதைக் கேட்டு அவள் பயப்படவில்லை. மாறாக ''அப்பா! நான் சொல்கிறபடி சொல்லி செய்யச் சொன்னதை நீங்கள் செய்தால் இந்த ராட்சஸனின் தொல்லையிலிருந்தும் விடுபடலாம். நமக்கும் நல்ல ஆதாயம் கிடைக்கும்'' என்றாள். அவனும் மகளின் சொற்படியே நடக்கவும், ராட்சஸனிடம் சொல்ல வேண்டியதைச் சொல்லவும் சம்மதம் தெரிவித்தான்.

மாலதியின் யோசனைப்படி அவளது தந்தை தன்னிடமிருந்த பணத்தையெல்லாம் செலவு செய்து நிறைய முயல்களையும் ஒரு பீப்பாய் திராட்சையிலிருந்து தயாரிக்கப்பட்ட மதுவையும் வாங்கி வந்தான். மாலதி அக்கம் பக்கத்து வீடுகளில் இரவலாகக் கேட்டு பலவிதத் துணிகளை

அப்போது மாலதி ''எங்களுக்கு அதிகச் செலவே இல்லை. நம் நாட்டில் எலிகளுக்கா பஞ்சம்? அவற்றைப் பிடித்தோம் பக்குவப்படுத்தி சமைத்தோம்'' என்றாள். ராட்சஸனும் ''எலிகளின் மாமிசம் இவ்வளவு ருசியா? நான் மணந்த பெண்களில் ஒருத்தி கூட ஒரு நாளும் எலி மாமிசத்தைப் பக்குவமாய் சமைத்ததே இல்லை. அவர்களுக்கு இந்தப் பக்குவம் தெரியாது போலிருக்கிறது'' என்றான். தனக்கு மனைவியாகப் போகும் மாலதி சிக்கனமாய்க் குடித்தனம் நடத்துபவள் எனக் கண்டு அவன் மகிழ்ந்து சுவரோரம் தொங்கவிடப்பட்ட துணிகளைப் பார்த்து ''இவற்றையெல்லாம் நீதான் நெய்தாயா?'' என்று கேட்டான்.

மாலதியும் ''இவற்றையெல்லாம் பத்து நாட்களுக்கு முன்தான் நெய்து முடித்தேன்'' எனக் கூறித் தன் இரு கை களையும் உயர்த்திப் பத்து விரல் களையும் காட்டினாள். அவளது கைகள் வேலை செய்து சொர சொரப் பாக இருந்ததை அவன் கவனித்தான். இதனால் ராட்சஸன் மாலதியை மேலும் உயர்வாக மதிப்பிட்டுக் கொண்டான். அதன் பின் தன் பக்கம் வைக்கப்பட்டிருந்த பீப்பாயிலிருந்து மதுவை எடுத்து அருந்தி ''ஆகா! எவ் வளவு உயர்ந்த ரக மது! இதைத் தயா ரிக்க மிகவும் செலவாகி இருக்குமே'' என்றான்.



அதற்குக் குடியானவன் ''எங் களுக்கு என்ன செலவு? பிறரைப் போல அழுகிப் போன திராட்சைப் பழங்களை உலர வைத்துப் பன்றிக் குப் போடாமல் அவற்றை சேகரித்து மாலதி தனக்குத் தெரிந்த ஒரு ரகசிய முறையில் இந்த மதுவைத் தயாரித் தாள்''என்றான். ராட்சஸனும் ''அழு கிப் போன திராட்சையிலிருந்து இப் படி நல்ல மதுவைத் தயாரிக்கக் கூட ஒரு வழி இருக்கிறதா? எனக்குத் தெரி யாதே சரி, மாலதியைக் கல்யாணம் செய்து கொண்ட பின் அவளிட மிருந்து நான் தெரிந்து கொள்கிறேன் எனக்கு வரதட்சணை என்று கூட எதுவும் கொடுக்க வேண்டாம்'' என் றான்.

குடியானவனும் ''வரதட்சிணை கொடுப்பதா? நான் மாலதியை உனக் குக்கல்யாணம் செய்து கொடுத்தாலே பல லட்ச ரூபாய்கள் கொடுத்து போலாகும். இவ்வூர் சேட் இவளை மணந்துகொள்ள எனக்கு இரண்டு லட்சம் கொடுப்பதாகக் கூறினார். அது பற்றி யோசித்து முடிவு செய்வ தாகக் கூறியுள்ளேன்'' என்றான்.

அதைக் கேட்ட ராட்சஸன் கோபத் தோடு ''என்ன விளையாடுகிறாயா? நான் மாலதியைத் தூக்கிக் கொண்டு ஓடிப் போனால் உன்னால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டான். அதைக் கேட்ட குடியானவன் ''கட கட''வென்று சிரித்து ''உனக்கு மாலதி யைப் பற்றித் தெரியாது. அவள் முரண்டு பிடித்தால் யாராலும் எதுவும் செய்ய முடியாது. உன்னைத் துண்டு துண்டாக நறுக்கி ஊறுகாய் போட்டு விடுவாள். சாதுவுக்கு அவள் சாது. முரடனுக்கோ அவள் மகா முரடு. தெரிந்ததா?'' என்றான்.

அது கேட்டு ராட்சஸன் தணிந்து ''சரி. உனக்கு லட்சம் ரூபாய்



கொடுத்து விடுகிறேன். சம்மதமா?'' என்று கேட்கவே குடியானவன் ''ஒரு லட்சம் போதாது. இரண்டும் லட்சம் வேண்டும்'' என்றான். ராட்சஸனும் மாலியை மணந்தால் தனக்கு நல்ல ஆதாயமே என எண்ணி குடியானவனுக்கு இரண்டு லட்சம் ரூபாய் கொடுத்தான். குடியானவனும் அதை வாங்கி பத்திரப் படுத்தி வைத்தான்.

இதன் பிறகே திருமணம் பற்றி பேச்சுவார்த்தை தொடங்கியது. அப்போது மாலதி ராட்சஸனிடம் ''என்னை மணக்கு முன் என் இரு விருப்பங்களை நிறைவேற்ற வேண்டும். சிக்கனமாக வாழ்க்கை நடத்த எனக்கு நான் கூறுவது போல் ஒரு புதிய வீட்டைக் கட்டிக் கொடுக்க வேண்டும். இரண்டாவதாக கிழவி வாத்துக்களின் இறகுகளைப் பிடுங்கும் போது புதிய இறகுகளால் எனக்கு ஒரு மெத்தை தயாரித்துக் கொடுக்க வேண்டும். அது நான் படுத்து நன்கும் விதத்தில் மெத்தென்று இருக்க வேண்டும்'' என்றாள்.

ராட்சஸன் அந்த இரு வேலைகளையும் தானே செய்து விடுவது என்று தீர்மானித்து அவள் விரும்பியபடி புதிய வீட்டைக் கட்டிக் கொடுத்தான். அப்போது குளிர்காலம் ஆரம்பமாகி இருந்தது. அப்போது மாலதி துணியால் நீண்ட மெத்த உறை ஒன்றைத தயாரித்து வைத்தாள். அடுத்து பனி விழும் காலம். அப்போது பனி விழுவதை அப் பகுதி மக்கள் 'கிழவி வாத்தின் இறகுகளைப் பிடுங்கிப் போடுகிறாள்'' என்று கூறுவார்கள்.

மாலதி ராட்சஸனுக்கு கிழவி இறகுகளை பிடுங்கிப் போட்டுக் கொண்டிருக்கிறாளெனச் செய்தி அனுப்பினாள். ராட்சஸன் வந்ததும் அவள் ''கீழே விழும் இறகுகளை எல்லாம் சேர்த்து இந்தப் பைக்குள் போடு'' இது நிரம்பியதும் இதன் வாயைக் கட்டிவிடு'' என்றாள். ராட்சஸன் மண்வெட்டி எடுத்து வந்து மாலதி இறகுகள் எனக்காட்டிய பனிக் கட்டிகளை எடுத்து அவள் கொடுத்த நீண்ட பைக்குள் போடலானான். பையும் ஒருவாறாக நிரம்பியது அப்போது மாலதி ''இதன் வாயை தைத்து இதன் மேல் ஒரு விரிப்பைப் போடுகிறேன். இன்றிரவு இதன் மீது படுத்துக் கொண்டு பார். மெத்தென்று இருக்கும். நீ என் இரு விருப்பங்களையும் நிறைவேற்றி விட்டதால் நாளையே நமக்குக் கல்யாணம்' என்று கூறினாள்.

ராட்சஸனும் மாலதி கூறியபடி அந்தப் பனிக்கட்டி மெத்தை மீது படுத்தான். அவன் படுத்த சற்று நேரத்தில் பைக்குள்ளிருந்த பனிக்கட்டி உருகி விட்டது. படுக்கை ஈரமாகவே இருந்தது. மாலதி கூறியபடி இரவு முழுவதும் அதன் மீது படுத்திருக்க வேண்டுமாதலால் அப்படியே படுத்துக் கிடந்தான். அவனது உடம்பு முழுவதும் வலிக்கலாயிற்று. மறு நாள் காலை அவனால் எழுந்து நிற்கவே முடியவில்லை. மெத்தையோ பாதிக்கும் மேல் கரைந்தும் போயிற்று.

அப்போது ராட்சஸன் ''மாலதியின் சிக்கனம் எனக்குப் பிடித்திருந்தாலும் தினமும் மாலதியுடன் இப்படியொரு மெத்தையில் படுக்க வேண்டுமே என நினைத்தாலே பயமாய் இருக்கிறது'' என்று எண்ணித் தன் கோட்டைக்குப் போய் விட்டான்.

ராட்சஸன் கோட்டையைப் போய்ச் சேர்ந்து விட்டான் என்று உறுதி செய்து கொண்ட பிறகு மாலதி தன் தந்தையை அவனோடு பேச அவனது கோட்டைக்கு அனுப்பினாள். குடியானவனும் ராட்சஸனின் கோட்டைக்குப் போய் வாசலில் நின்ற காவலாளியிடம் ''நீ போய் உன் எஜமானனிடம் மாலதியின் தந்தை திருமண விஷயமாகப் பேசவந்திருப்பதாகக் கூறு'' என்றான். உள்ளே போய் விட்டு வந்த அக்காவலாளி ''தங்களை ஏமாற்றமடையச் செய்ததற்காக என்ன நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமென அவர் கேட்டு வரச் சொன்னார்'' என்றான்.

குடியானவன் ''அவரது இஷ்டப்படி கொடுக்கட்டும்'' எனவே காவலாளியும் உள்ளே போய் விட்டு வந்து ''அவர் தம் வாத்துக்களையெல்லாம் உங்களுக்குக் கொடுத்து விட்டார். நீங்கள் அவற்றை ஓட்டிக் கொண்டு போகலாம். இதற்குப் பிறகு நீங்கள் வரக் கூடாது. எங்கள் எஜமானரின் கல்யாணப் பேச்சையே எடுக்கக் கூடாது. இது அவர் கட்டளை'' என்றான்.

குடியானவன் ராட்சஸனின் வாத்துக்களை ஓட்டிக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான். அதற்கு பிறகு ராட்சஸன் யாரிடமும் கல்யாணப் பேச்சே எடுக்கவில்லை. காரணம் மாலதி தயாரிக்கச் சொன்ன வாத்துக்களின் இறகுகளான மெத்தைதான்.



## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1998 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்.



M.NATARAJAN



M.NATARAJAN

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜனவரி 25–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

### நவம்பர் மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **இயற்கை அழகில் சிறுமியின் ஒய்யாரம்.**

*இரண்டாவது போட்டோ* : **செயற்கை அழகில் பழமையின் அலங்காரம்.**

*பரிசு பெற்றவர்* : **சியாமளா தேவி, சிட்லபாக்கம், சென்னை - 64.**




Printed by B.V. REDDI at Prasad Process Pvivate Ltd., Chandamama Building, Chennai- 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K.Salai, Vadapalani, Chennai- 600 026 (India) Editor : NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா




அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 129.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 276.00

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 135.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 276.00

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

